# மங்கை

மே' 1992

☆ ஸ்ரீவைஷ்ணவி ஆலயம்
*(அருள் வலம்)*

☆ திருக்குற்ருலம்

☆ காவல் காக்கும் கண்கள்
*(சிறப்புக் கட்டுரை)*

☆ நாட்டிய விழா

மற்றும் வழக்கமான சிறப்புப் பகுதிகள் அனைத்தும்

விலை ரூ. 6/-

# இளமை துள்ளும் வண்ணங்கள்




பள்ளிக்குச் சென்றால் ஆனந்தம்
புதிய ஃபெவிக்ரில்
ஸ்டூடன்ட்ஸ் போஸ்ட்டர்
கலர்கள் இருந்தால் ஆனந்தம்
பேரானந்தம்!
வண்ணமோ வண்ணம்
அழகான வண்ணம்
பச்சைக் கிளிபோல்
பளிச்சிடும் வண்ணம்
கண்ணைப்பறிக்கும் சிகப்பு, நீலம்
பால்போல்
வெண்மை, பனிபோல் மென்மை
இன்னும் என்ன யோசனை?!!
படங்களை உடனே கையில் எடுப்பீர்
புதிய ஃபெவிக்ரில்
ஸ்டூடன்ட்ஸ் போஸ்ட்டர் கலர்களை
தீட்டுவீர்! பரவசம் அடைவீர்!




(அம்மாவைக் கண்டு மிரளாதீர் கைவண்ணம் பார்ப்பார்,
விலையைக் கேட்டார் அசந்தே போவார்!)

**இலவசம்**
பெயின்ட்-எ-போஸ்ட்டர்
இம்முகவரிக்கு எழுதிப் பெறவும் :
ஃபெவிக்ரில், போஸ்ட் பாக்ஸ் 17437,
அந்தேரி (கிழக்கு), பம்பாய்-400 059.

புதிய
**ஃபெவிக்ரில்**
ஸ்டூடன்ட்ஸ்
போஸ்ட்டர் கலர்கள்

everest/91/PIL/117 tm






பெயர் ____________ வயது ____________
முகவரி ____________
____________
பள்ளிக்கூடம் ____________

CDM



# அம்புலிமாமா

மே 1992



## பொருளடக்கம்





தனிப்பிரதி ரூ. 4-00.

வருட சந்தா ரூ. 48-00.





# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி


## உலகை மேலும் அழகாக்குவோம்

உலகை மேலும் எப்படி அழகாக்குவது என்பது பற்றியே ஒருவர் எண்ண வேண்டும். உலகம் என்பது வெறும் மலைகளும், ஆறுகளும் கடல்களும் தன்னுள் கொண்டதல்ல. மரம், செடி, கொடி, பறவைகளையும், மிருகங்களையும், புழு பூச்சிகளையும் கூடக் கொண்டது. அதுமட்டுமா? மனிதர்களையும் அது தன்னுள் வசிக்கச் செய்கிறது.

மனிதன் மற்ற படைப்புகளிலிருந்து மாறுபட்டவன். அவன் சிந்திக்கவும், நல்லது கெட்டதுகளைப் பாகுபடுத்தி தன் வாக்காலும் மனத்தாலும் செயலாலும் தனக்கும் பிறருக்கும் மகிழ்ச்சியையும் நன்மையையும் அளிக்கும் ஆற்றல் படைத்தவன். மனம் நரகத்தைச் சொர்க்கமாயும் சொர்க்கத்தை நகரமாயும் ஆக்கவல்லது என்பது ஆங்கிலக் கவிஞர் ஜான்மில்டனின் கூற்று.

எனவே உலகின் அழகை அதிகரிப்பதோ அல்லது குலைப்பதோ மனிதனின் கையில்தான் உள்ளது என்பது தெளிவாகிறது. உலகில் நாம் வாழும் முறை மற்றவர்களை மகிழ்விப்பதோடு உலகையும் அழகு பெறச் செய்யும்.

இறைவன் தன் ஒவ்வொரு படைப்பும் எப்படி வாழ வேண்டும் என வகுத்திருக்கிறான். ஆனால் மனிதன் எவ்வாறு வாழ வேண்டும் என்பதை அவனுக்கே இறைவன் விட்டு வைத்திருக்கிறான்.


மதிமுகம்: 90 | மே 1992 | புன்னகை: 5

தனிப்பிரதி: ரூ. 4-00 | வருட சந்தா: ரூ. 48-00


CHITRA

# சால்வடாரில் அமைதி



ஒரு நாட்டின் உள் நாட்டுப் போர் முடிந்து அமைதி ஏற்பட்டது என்றால் அது எவ்வளவு மகிழ்ச்சியான விஷயம்! மத்திய அமெரிக்காவில் எல்சால் வடாரில் தற்போது இப்படிப்பட்ட அமைதி ஏற்பட்டுள்ளது. அங்கு ராணுவ அரசிற்கும் இடதுசாரி யினருக்கும் இடையே கடந்த பனி ரெண்டு ஆண்டுகளாக உள்நாட்டுப் போர் நிகழ்ந்து வந்தது. அதன் காரண மாக 75,000 பேர்கள் உயிரிழந்தனர்.

சுமார் 450 ஆண்டுகளுக்கு முன் அந்நாட்டு அஜ்டெக் மக்களை அங்கு குடியேறிய ஸ்பெயின் நாட்டவர் வென்றார்கள். 19வது நூற்றாண்டின் ஸ்பெயின் ஆட்சியைப் போக்க கௌதிமாலா, ஹோண்டுராஸ், நிகர குவா, கோஸ்டா ரிகா முதலிய நாடு கள் ஒன்று சேர்ந்து 1823ல் மத்திய அமெரிக்க கூட்டமைப்பை நிறுவின. ஆனால் இந்தக் கூட்டமைப்பு 15 ஆண் டுகள் மட்டுமே இருந்தது. அது கலைந் ததும் 1838ல் எல்சால்வடார் சுதந்திர நாடாகியது.

இந்நாட்டின் முக்கிய தொழில் விவ சாயம். ஆனால் விவசாய நிலங்கள் எல் லாம் பணக்காரக் குடும்பங்களின் வசம் இருந்தன. அவர்கள் விவசாயி களைக் கசக்கிப் பிழிந் தார்கள். நூறாண்டு சுயாட்சியால் மக்கள் போக்கு எவ்வளவோ மாறிவிட்டது. சால்வ டார் மக்கள் ஆயிரக் கணக்கில் தம்நாட்டை விட்டு வெளியேறி ஹோண்டுராஸில் குடிபுகுந்தார்கள். இத னால் அந்த இருநாடுகளி டையே சச்சரவுகள் மூண்டன.

1970ல் நடந்த உலகக் கால்பந்துப் போட்டிகளில் சச்சரவுகள் ஏற்பட்டு அப்போது முதல் அவற்றிடையே போர் மூண்டது.

1972ல் ஜெனரல் கார்லோஸ் ரோம ரோ சால்வடாரின் அதிபராக தேர்ந் தெடுக்கப்பட்டார். ஆனால் அவரது ஆட்சியால் உள்நாட்டுக் கலவரங் களும் போர்களும் மூண்டன. அநேக கொரில்லாப் படைகள் அமைந்தன. அவை கொலைகளிலும் ஆட்களைக் கடத்துவதிலும் ஈடுபட்டன. 1980ல் தலைநகர் எல்சால்வடாரின் ஆர்ச் பிஷப் ஆஸ்கார் ரோமிரோ கொடூர மாகக் கொலை செய்யப்பட்டார். அத னால் உள்நாட்டுப் போர் மூண்டது.

அதே ஆண்டில் ஜோஸ்டியு ஆர்ட் சால்வடாரின் அதிபரானார். ஆனால் அவர் தேர்தலின் போது வாக்களித்த படி பொருளாதாரச் சீர்திருத்தங்களைச் செய்யவில்லை. மேலும் அவர் புற்று நோயாளியானார். அவர் செயல்பட

முடியாது போகவே வன்முறை தாண்டவமாடியது. அவர் பதவி விலக வேண்டியதாயிற்று. அதற்குப்பின் தேர்தலில் 1989ல் ஆல்ப்ரோடோ கிரிஸ்டியானி நாட்டின் அதிபராக தேர்ந்தெடுக்கப்பட்டார். அவரது முயற்சியால் ஐக்கிய நாடுகள் சபை தலையிட்டு அமைதியை நிலைநாட்ட முயற்சிகளை இரண்டு ஆண்டுகளாக மேற்கொண்டு வெற்றியும் கண்டது.

கடந்த ஜனவரியில் எல்சால்வடார் அரசும் இடதுசாரிகளின் கூட்டமைப்பும் ஒரு உடன்படிக்கையில் கையொப்பம் செய்தன. அதனால் அந்நாட்டில் பிப்ரவரி முதல் தேதியிலிருந்து ஒரு புதிய அத்தியாயம் தொடங்கியது. இந்த உடன்படிக்கையில் கையொப்பமிடச் செய்த ஐ. நா. பொதுச் செயலாளர் பூட்ரோஸ் காலி "எல்சால்வடாரில் நிலவிய காரிருள் இப்போது அகன்றுவிட்டது" எனக்கூறினார்.

கொரில்லாப் போர் நிறுத்தம், ராணுவப் படைக் குறைப்பு, நிலச் சீர்திருத்தங்களை அமல் செய்தல், நீதி நிர்வாகம், தேர்தல் விதிகளில் மாறுதல்கள் ஆகியவை அந்த உடன்படிக்கையின் முக்கிய அம்சங்கள்.

புரட்சியாளர்கள் மெக்சிகோவிலிருந்து தம் தாய்நாடான சால்வடாருக்குத் திரும்பி வரவே மக்கள் தலைவர்கள் அவர்களை "நம் நாட்டவர் வந்துவிட்டனர்" எனக் கூறி உற்சாக வரவேற்பு அளித்தார்கள்.





# முனிவரின் மனமாற்றம்

வெகு காலத்திற்குமுன் கந்தமாரணியம் என்ற காட்டில் உக்கிரமூர்த்தி என்ற முனிவர் இருந்தார். யார் ஒரு சிறு தவறு செய்தாலும் அவர் அதைச் சகிக்காமல் அவர் உடனே அவனைச் சபித்து விடுவார். இம்மாதிரி ஒருமுறை சுகுணசேனன் என்ற மன்னன் ஏதோ ஒரு சிறு தவறு செய்ததற்காக அவன் ராட்சஸனாகக் கடவது என்று அவர் சாபம் கொடுத்து விட்டார்.

சுகுணசேனனின் ஆட்சியில் மக்கள் சுகமாகவே வாழ்ந்து வந்தனர். ஆனால் அவன் முனிவரின் சாபத்தால் ராட்சஸன் ஆனதும் தான் பரிவுடனும் பாசத்துடனும் நடத்திய மக்களைத் துன்புறுத்தலானான். இதைக் கண்ட சுகுணசேனனின் மந்திரி சதுரநாதன் இப்படி நடக்கக் காரணம் உக்கிரமூர்த்தியின் சாபமே எனத் தெரிந்து கொண்டு வீட்டான்.

அவன் யாவர் நலனையும் கருத்தில் கொண்டு உக்கிரமூர்த்தி முனிவர் வாழும் காட்டிற்குச் சென்றான். அவன் முனிவரைக் கண்டு ''சுவாமி! சுகுணசேனன் செய்த சிறு தவறுக்கு நீங்கள் அவனை ராட்சஸனாகப் போகச் செய்தது சரி எனக் கொண்டாலும் அவனால் இப்போது மக்கள் துன்புறுகிறார்களே! அவன் செய்த தவறுக்கு அப்பாவி மக்களும் தண்டனை அனுபவிக்க வேண்டுமா? மக்களின் துயர் போக்க மன்னனின் சாபத்தை எப்படி விலக்குவது என்று தாங்கள் தாம் கூற வேண்டும்'' என்று பணிவுடன் வேண்டினான்.

அப்போது முனிவர் ''இதெல்லாம் அவரவர் விதிப்படித்தான் நடக்கும். மக்கள் ராட்சஸனாக மாறிய சுகுணசேனனால் கஷ்டப்பட

—பாபநாசம் சாமா—



வேண்டும் என்று தலைவிதி இருக்கும் போது அதை யாரால் மாற்ற முடியும்? கடவுளே சில சமயங்களில் ராட்சஸர்கள் கேட்ட வரங்களைக் கொடுத்து மக்கள் துன்பப்படும்படிச் செய்யவில்லையா? அதுபோலத் தான் என் சாபமும்" என்றார்.

அப்போது சதுரநாதன் "சுவாமி! தாங்கள் கூறியது போல எல்லாம் விதிப்படிதான் நடக்கும். இதுவரை என் நாட்டு மக்களும் மன்னனும் கஷ்டப்பட வேண்டும் என்ற விதி இருந்தது. அதை மாற்ற நினைத்தே கடவுள் என்னைக் கருவியாக்கித் தங்களிடம் இப்போது அனுப்பி வைத்திருக்கிறார் என எண்ணுகிறேன். தயவு செய்து மன்னனுக்குச் சாபவிமோசனம் எப்படி ஏற்படும் என்று கூறினால் அதனால் மக்களும் மன்னனும் சுகப்படுவார்கள்" என்று மனம் உருகக் கூறினான்.

அதைக்கேட்ட உக்கிரமூர்த்தியும் மகிழ்ந்து "அப்பனே! மக்களுக்கு இவ்வளவு ஆர்வத்துடன் நீ பணி புரிய எண்ணுவது கண்டு மகிழ்கிறேன். உன் மன்னன் சாபவிமோசனம் பெற நீ இங்கிருந்து நூறு யோசனை தூரத்திலுள்ள காளி கோவிலுக்குப் போய் அந்த தேவியை வழிபட்டு தரிசித்தால் தேவி உனக்கு அருள்புரிவாள்" என்றார்.

சதுரநாதனும் அவரை வணங்கி விடைபெற்றுக் கொண்டு மிகுந்த சிரமப்பட்டுப் பயணம் செய்து அந்தக் காளி கோவிலை அடைந்தான். அங்கிருந்த காளிதேவியின் விக்கிரகம் பார்க்கவே பயங்கரமாக இருந்தது. ஆனால் அவன் பயப்படாமல் அதனை வழிபட்டான். காளிதேவியும் அவன் முன் தோன்றி "மகனே! உன் உயரிய நோக்கம் எனக்குத் தெரியும். உன் மன்னன் சாபவிமோசனம் பெற வேண்டுமானால் நீ உடனே தலை நகருக்குத் திரும்பிப்போய் பாமர மக்களும் படித்து எளிதில் புரிந்து கொள்ளும் விதத்தில் ஆயிரம் பக்கங்கள் கொண்ட ஒரு கதையை நீ எழுதி உன் மன்னன் கேட்கும்படிப் படித்துக் காட்ட வேண்டும். கதை படிப்பதை இடையில் நிறுத்திவிடக் கூடாது. நீ எழுதிய முழுக்கதையை

யும் அவன் கேட்டதும் அவனது ராட்சஸ உருவம் போய்ச் சாதாரண மனிதனாகி விடுவான்'' என்றாள்.

அதைக் கேட்ட சதுரநாதன் ''தாயே! நான் அரசியல் பொருளியல், வணிகம், போர்க்கலை என்றெல்லாம் கற்றேனேயொழிய இலக்கியத்தைப் படிக்கவில்லையே. எனக்குக் கதை எழுதத் தெரியாதே'' என்றான். தேவியோ ''நீ உன்னால் முடியாது என நினைக்காதே. நீ எல்லோரிடம் எதாவது ஒரு அதிசய சம்பவத்தை எப்படியெல்லாம் உன் பேச்சு முறையில் விவரிப்பாயோ அதையே அப்படியே எழுது. அதே கதையாகி விடும். அதை நீ மன்னனுக்கும் படித்துக் காட்டு. மன்னனின் சாபம் விலகி விடும்'' என்றாள்.

சதுரநாதன் காளிதேவியை வணங்கிவிட்டுத் தலைநகருக்குத் திரும்பிச் சென்றான். அவன் தனக்குத் தோன்றிய விதத்தில் இஷ்டப்படி கண்ட கண்ட வார்த்தைகளை எல்லாம் உபயோகித்து ஆயிரம் பக்கக் கதை ஒன்றை எழுதி முடித்தான். அதை எடுத்துக் கொண்டு அவன் ராட்சஸனாக உள்ள சுகுணசேனனைத் தேடிச் சென்றான்.

சதுரநாதனைக் கண்டதும் ராட்சஸ உருவில் இருந்த சுகுணசேனன் அவன்மீது பாயலானான். சதுரநாதனோ சற்றும் பயப்படாமல் தான் எழுதி எடுத்து வந்த கதையை உரக்கப் படிக்கலானான். சதுரநாதன் கதையைப் படிக்க ஆரம்பித்ததுமே ராட்சஸன் பெட்டிப் பாம்பாய் அடங்கிவிட்டான். சதுர





நாதன் ஒவ்வொரு பக்கமாகப் படித்துக்கொண்டே இருக்க ஆடா மல் அசையாமல் ராட்சஸன் கேட்டுக்கொண்டு நின்றான். சதுர நாதன் கதையின் கடைசிப் பக்கத் தைப் படித்து முடித்ததும் அவன் எதிரே ராட்சஸ உருவம்போய் பழைய சுகுணசேனன் நின்றான்! மன்னன் முன்னைவிட அழகாக வும் இருந்தான்.

சதுரநாதன் சுகுணசேனனை அழைத்துக் கொண்டு அரண் மனைக்கு வந்தான். அப்போது மன்னன் "நீ எழுதிய கதைப் புத்த கம் மிக நன்றாக உள்ளது. இது போல நீ இன்னும் பல புத்தகங் களை எழுத வேண்டும்" எனக் கூறினான். அதுகேட்டு சதுரநாதன் "அரசே! உங்களைச் சாபத்திலி ருந்து விடுவிக்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்தில் ஏதோ ஒரு சக்தியால் உந்தப்பட்டு இந்தக் கதையை எழுதிவிட்டேன். இனி மேல் என்னால் எதுவும் எழுதவே முடியாது. இம்மாதிரிக் கதைகளை எழுத வேறு பண்டிதர்களிடம் சொல்லுங்கள்" என்றான்.

மன்னனும் தன் தர்பாரில் இருந்த பண்டிதர்களையும் கவிஞர் களையும் அழைத்து அவர்களிடம் சதுரநாதன் எழுதிய கதையைக் காட்டி அது போன்ற படைப்பு களை அவர்கள் அளிக்க வேண்டும் என்று கூறினான். அவர்கள் எல்லோரும் அதனைப் படித்துப் பார்த்துவிட்டு "அரசே! இந்த மாதிரி எங்களால் எழுத முடியாது. எப்பேர்ப்பட்ட உயரிய பண்டி தர் கூட இந்தவார்த்தைகளை ஒரு போதும் உபயோகிக்க மாட்டார்" என்று தம் அறுவறுப்பைக் காட்டிய வாறே கூறினார்கள்.

அதுகேட்டு மன்னன் கோபம் கொண்டு "இப்படிப்பட்ட நூலை மக்கள் யாவரும் படிக்க வேண்டும். இதனை ஆயிரக்கணக்கில் பிரதி கள் எடுத்து மக்களிடையே வினி யோகிக்கிறேன். இதுபோன்ற நூலை எழுதுபவருக்குப் பத்தாயிரம் வரா கன்கள் பரிசும் அளிக்கிறேன்" எனக் கூறினான்.

மன்னன் சதுரநாதனின் கதை

யைப் பல பிரதிகள் எடுத்து நாடெங்கும் வினியோகித்தான். மேன்மேலும் அதுபோன்ற நூலை எழுதுபவருக்குப் பரிசு என்று கேட்டதும் எல்லோரும் அதுபோல எழுதிக் குவிக்கலானார்கள். பண்டிதர்களோ அவற்றைக் கையால் தொடக்கூடக் கூசினார்கள்.

பாமரர்களுக்கு அத்தகைய நூல்களே பிடித்தன. அதுபோல் எழுதுபவர்களுக்குப் பணமும் அவற்றைப் படித்த மக்களுக்கு அவை நல்ல பொழுதுபோக்காகவும் விளங்கின. இதனால் நாளாவட்டத்தில் அந்நாட்டில் பண்டிதர்களையும் கவிஞர்களையும் ஆதரிப்போர் குறைந்து கொண்டே போயினர். அதனால் அவர்கள் ஓரிடத்தில் ஒன்றுகூடி "இப்படி நிகழக் காரணம் முனிவர் உக்கிரமூர்த்தியே. அவரைக் கண்டு பேசி என்ன செய்வது என கேட்கலாம். அவர் முன்கோபிதான். நம்மை எல்லாம் சபித்தாலும் அதுவும் ஒரு விதத்தில் நல்லதே. இப்படிப்பட்ட மூன்றாந்தர இலக்கியங்களைப் படிக்காமலாவது இருப்போமே" என முடிவு செய்தார்கள்.

அவர்கள் சதுரநாதன் எழுதிய கதையோடு உக்கிர மூர்த்தியைக் காணச் சென்றார்கள். ஒரு கூட்டம் வந்தது கண்டு அவர் தம் தியானத்திலிருந்து கலைந்து எழுந்து அவர்கள் வந்த காரணம் என்ன என்று கேட்டார். அவர்களும் தாம் வந்த காரணத்தைக் கூறி சதுரநாதன் எழுதிய கதையை அவரிடம் கொடுத்தார்கள். அவர் அதைப் படித்ததுமே அது எந்த சக்தியால் உருவா



னது எனத் தம் ஞானதிருஷ்டியால் தெரிந்து கொண்டு விட்டார்.

அவர் வந்தவர்களைப் பார்த்து "பண்டிதர்களே! நீங்கள் இங்கு வந்ததால் நெடுநாளாக என் மனதில் இருந்து வந்த சந்தேகம் தீர்ந்தது. நான் மோட்சம் அடைய வேண்டும் என்பதற்காக நெடுங் காலமாகத் தவம் செய்து வரு கிறேன். ஆனால் எனக்கு அவ்வப் போது கோபம் வந்துவிடுவதால் மோட்சம் அடைய முடியவில்லை. என் கோபத்தால் பலரை அவர் கள் விதிப்படி கஷ்டங்கள் அனுப விக்கும் விதத்தில் சாபம் கொடுத்து வந்துள்ளேன். ஆனால் இப்போ தெல்லாம் என்கோபம் தணிந்து போயிற்று. இதற்குக் காரணம் இந்த நூல்தான் என்று இப்போது எனக்குத் தெரிகிறது" என்றார்.

பண்டிதர்கள் அது எப்படி என்று புரியாமல் விழிக்கவே உக்கிர மூர்த்தியும் "இந்த மாதிரி நூலைப் படித்து ரசிப்பவன் ராட்சஸனா கத்தான் இருப்பான். இதனால் தான் ராட்சஸனாக இருந்த மன்னன் இதைப் படிக்கக் கேட்டுக் கொண் டிருந்தான். உங்கள் நாட்டு மக்களை இனி என் சாபம் எதுவும் செய்ய முடியாது. ஏனெனில் அவர்கள் இதைப் படித்து விட்டார்களே. அதனால் என்போன்ற முனிவர் களுக்கு இந்த உலகில் இடம் இல்லை" என்று கூறியவாறே ஆகாயத்தை நோக்கினார். அங் கிருந்து ஒரு விமானம் வருவதைப் பண்டிதர்கள் பார்த்தார்கள். அதி லிருந்து தேவதூதர்கள் உக்கிர மூர்த்தியை அழைத்து விமானத் தில் ஏற்றிக்கொண்டார்கள். உக்கிர மூர்த்தியும் "இந்த நூல் என் விதி யால் வந்தது. இதில் யாருடைய சக்தி உள்ளது என அறிந்து கொண் டேன். இனி நான் மோட்சலோகம் போகிறேன்" என்றார். பண்டிதர் கள் வியப்புடன் பார்த்து நிற்க, உக்கிரமூர்த்தி ஏறி அமர்ந்த விமா னம் ஆகாயத்தில் சென்று மறைந்தது.






வீரபுரி நாடு முழுவதும் ஒரே கோலாகலமாக இருந்தது. அந் நாட்டு மக்கள் அடுத்த மாதம் வரப் போகும் இளவரசியின் பிறந்த நாள் கொண்டாட்டம் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள். அதற் கான ஏற்பாடுகளை அப்போதி ருந்தே செய்யத் தொடங்கினார் கள். பிறந்த நாளன்று இளவரசி தன் உறவினர்களும் தோழிகளும் புடைசூழ அரண்மனையிலிருந்து கிளம்பி தேவியின் ஆலயத்திற்குப் போய் தேவியை வழிபட்டுவிட்டு முக்கிய வீதிகளில் பவனி வருவது ஒவ்வொரு ஆண்டிலும் நடக்கும் நிகழ்ச்சியாகும். அது சமயம் சாலை யின் இருபுறங்களிலும் உற்சாகத் தோடு மக்கள் நின்று அவளைக் கண்டு மகிழ்ச்சி ஆரவாரம் செய் வார்கள்.

இந்த விழாவைக் கொண்டாட அலங்கார வளைவுகள் தோரணங் கள் வீதிகளில் கட்டப்பட்டன. தெருக்கள் சுத்தமாகப் பெருக்கப் பட்டு, நீர் தெளித்து, காலையிலும் மாலையிலும் கோலங்கள் ஒவ் வொரு வீட்டு வாசலிலும் போடப் பட்டன. எல்லோரும் இளவரசி யின் பிறந்தநாள் வரும் தினத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் கள்.

ஆனால் மக்கள் ஏமாற்றம் அடை யும் விதத்தில் இளவரசியின் பிறந்த நாள் விழா ரத்து செய்யப் பட்டதாக அந்த விழா நடப்பதற்கு மூன்று நாட்களுக்கு முன்பு தண்



மறுபடியும் படுக்கையிலேயே விழுந்தாள்! அப்புறம் அவளால் அசையக் கூட முடியவில்லை.

இந்நிலை கண்டு அரசனும் அரசியும் இளவரசியின் படுக்கை அறைக்குள் ஓடினார்கள். ஏதோ நெடுநாள் வியாதியில் இளைத்துப் போனவள் போல இருந்த தம் மகளைக் கண்டு அவர்கள் துடித்துப் போனார்கள். உடனே அவர்கள் ராஜ வைத்தியரை வரவழைத்தார்கள்.

அந்த வைத்தியரும் இளவரசியின் உடல் நிலையைப் பரிசோதித்து விட்டு "அரசே! இளவரசிக்கு எந்த நோயும் இருப்பதாகத் தெரியவில்லை. இப்போதைக்கு ஒரு மருந்தும் வேண்டாம். மூன்று நாட்கள் கவனித்துப் பார்ப்போம். அதுவரை இவள் ஓய்வு எடுக்கட்டும்" என்றார். மன்னனும் சரி எனவே ராணியும் தன் மகளின் படுக்கையருகிலேயே உட்கார்ந்து விட்டாள். வித்தியாவதி நன்கு தூங்கலானாள். மாலையில் வந்து பார்த்தபோது அவள் கண்விழித்து "ஒரே சோர்வாக உள்ளது. பசியே இல்லை" என்றாள்.

வைத்தியர் அவளுக்கு ஆகாரமாகப் பழரசம் மட்டும் கொடுக்கச் சொல்லிவிட்டுச் சென்றார். இரண்டாவது நாளிலும் இளவரசியின் உடல்நிலை முதல் நாளில் இருந்தது போலவே இருந்தது. அவளருகே

டோரா மூலம் நாடெங்கும் அறிவிக்கப்பட்டது. அதற்குக் காரணம் இளவரசி எழுந்திருக்கக்கூட முடியாமல் படுக்கையிலேயே படுத்திருந்ததுதான்.

வீரபுரி மன்னன் வீரசேனனும், ராணி வஜ்ஜிரேஸ்வரி தேவியும் தம் ஒரே மகளான வித்தியாவதியின் உடல்நலம் திடீரெனக் குன்றிப் போனது கண்டு இடிந்து போனார்கள். அதற்கு முன் வித்தியாவதி ஒருநாளும் லேசான தலைவலி என்று கூடப் படுத்தது இல்லையே. ஆனால் அவள் மூன்று நாட்களுக்கு முன் காலையில் படுக்கையிலிருந்து எழுந்திருக்க முடியாது போனாள். பணிப்பெண்கள் தூக்கி நிறுத்த முயன்றும் அவள் துவண்டு

ராணிதான் உட்கார்ந்திருந்தாள். அவள் அன்றிரவு வெகுநேரம் ஆன போது சற்றுக் கண்ணயர்ந்தாள். அப்போது தன்னை யாரோ மெது வாகத் தொடுவது போல அவள் உணரவே, சட்டெனக் கண்விழித் துப் பார்த்தாள். வெள்ளை நிற உருவம் ஒன்று அறையின் வாசல் வழியே போவது போல அவள் கண்டு திடுக்கிட்டாள். அந்த உரு வத்தின் முகம் தெளிவாகத் தென் படவில்லை.

தான் கண்டது ஒருவேளை கனவோ என எண்ணி அவள் மறு படியும் கண்ணை மூடிக்கொண் டாள். சற்று நேரத்திற்குப்பின் மீண்டும் யாரோ தன்னை மெது வாகத் தொட்டதுபோல அவள் உணர்ந்தாள். உடனே அவள் எழுந்து நின்று சுற்றிலும் பார்த் தாள். யாரும் தென்படவில்லை. ஆனாலும் அவள் மன்னனை எழுப் பித் தான் கண்டதைக் கூறினாள்.

அது கேட்டு மன்னனும் "நீ நம் மகளின் உடல்நிலை பற்றிக் கவலைப் பட்டுக் கண்ணயர்ந்து போனாய். அப்போது ஏதோ கனவுதான் கண் டிருக்கிறாய். நம் மகளுக்கு எந்தக் கெடுதலும் வராது. நீ நிம்மதியாக இரு" என்று ஆறுதல் கூறினான்.

மூன்றாவது நாள் காலையில் ராஜ வைத்தியர் வந்தார். இளவரசி யின் உடல்நிலையில் எவ்வித மாற்றமும் ஏற்படாதது கண்டு ஒரு



மருந்து கொடுத்து அதை இளவரசி மூன்று வேளைகளில் சாப்பிடட் டும் என்று கூறிவிட்டுச் சென்றார்.

இளவரசியின் உடல்நிலை காரணமாக அவளது பிறந்த நாள் விழா ரத்து செய்யப்பட்டதாக அறி விக்கப்பட்டதோடு அவள் குண மடைய எல்லா ஆலயங்களிலும் சிறப்பு வழிபாடுகளும், பூஜைகளும் நடைபெற்றன. பிறந்ததிலிருந்து அன்றுவரை பதினாறு ஆண்டுகளாக எந்த நோயும் நொடியும் இல்லாதி ருந்த இளவரசி திடீரெனப் படுத்த படுக்கையாகக் கிடந்தது நாட்டு மக்களின் மனதைப் பெரிதும் வாட்டியது.

இளவரசி பவனி வரும்போது நடக்கும் வாண வேடிக்கைகள்,



ஆட்டங்கள், பாட்டுக்கள் என்பன இல்லாது போனதும் அவர்களது மனவருத்தத்தை வெளிப்படுத்தியது. எல்லோரும் இளவரசியின் உடல்நலம் குன்றிப் போனது பற்றியே பேசலானார்கள். சிலர் அரண்மனை வாசலில் நின்று கொண்டு உள்ளிருந்து வெளியே வரும் பணியாட்களிடமும் வீரர்களிடமும் இளவரசியின் உடல் நிலை எப்படி உள்ளது என விசாரிக்கலானார்கள்.

அரண்மனையிலிருந்து வரும் பணியாட்களும் மக்கள் மனம் ஆறுதல் அடைய "இப்போது கொஞ்சம் பரவாயில்லை. விரைவில் குணமடைந்து விடுவார்" என்று கூறலானார்கள். அவர்கள் அரண்மனை வாசலில் கூடி நின்றவர்களிடம் இளவ்ரசி குணமடைய எந்தெந்தக் கோவில்களில் எப்போதெல்லாம் சிறப்பு வழிபாடுகளும், பூஜைகளும் நடக்கப் போகின்றன என்ற விவரங்களையும் தெரிவித்துக் கொண்டிருந்தார்கள்.

மன்னன் இளவரசியின் உடல் நிலைக்கு வேறு ஏதாவது காரணம் இருக்கலாமோ என எண்ணி ஆஸ்தான சோதிடர் வாசஸ்பதியைக் காணச் சென்றான். அப்போது மக்கள் இன்னமும் ஏதாவது புதிய தகவல்கள் தெரியலாம் என எண்ணி அவற்றை அறிந்து கொள்ளவும் ஆவலுடன் இருந்தார்கள். வேறு சிலர் ஆலயங்களுக்குச் சென்று சிறப்பு வழிபாடுகளில் கலந்து கொண்டார்கள்.

ஆஸ்தான சோதிடரும் மன்னனுடன் அரண்மனைக்கு வந்தார். அவர் இளவரசியின் ஜாதகத்தை நன்கு பரிசீலித்துப் பார்த்தார். சற்று நேரம் கண்ணை மூடிக் கொண்டு விரல்விட்டு எண்ணி அவர் "அரசே! இளவரசி பிறந்த போதே நான் ஜாதகத்தைக் கணித்து என்ன சொன்னேன் என்று உங்கள் நினைவில் இருக்கிறதா? அப்போதே நான் இளவரசிக்கு அவளது பதினாறாவது வயதில் ஒரு கண்டம் உள்ளது எனச் சொன்னேனே. நினைவில் இல்லையா?" என்றார்.

மன்னனும் "அதெல்லாம் எனக்கு

இப்போது நினைவில் இல்லை. வித்தியாவதி இன்றுவரை ஒரு தலைவலி என்று கூடப்படுத்தது கிடையாது. ஓடியாடி விளையாடித் திரிந்து கொண்டுதான் இருந்தாள். இவளுக்கு இப்படி ஒரு நிலை ஏற் படும் என்று நான் கனவில் கூடக் கருதவில்லை. ராஜ வைத்தியர் கூட இவளுக்கு எந்தவித நோயும் இல்லை என்றே கூறுகிறார். ஆனால் இவள் ஏன் இப்படிச் சோர்வுற் றுப் படுத்துக் கிடக்கிறாள் என்பது தான் எனக்குப் புரியவில்லை'' என்றான்.

இளவரசியின் பக்கத்தில் இருந்த ராணி வஜ்ஜிரேஸ்வரி தேவியும் ''இன்றுதான் வித்தியாவதியின் பிறந்த நாள். இதனை வெகு விமரிசையாக இவ்வளவு நாட்களா கக் கொண்டாடி வந்தோம். நாட்டு மக்களும் இவ்விழாக்களில் மிகுந்த உற்சாகத்துடன் கலந்து கொண்டே வந்திருக்கிறார்கள். வித்தியாவதி முழுவதுமாக குணம் அடைய வழியைச் சொல்லுங்கள்'' என்று வேண்டினாள்.

வாசஸ்பதி மீண்டும் ஜாதகத்தை நன்கு பார்த்துவிட்டு ஏதோ கணக் குப் போட்டுப் பார்த்தார். பிறகு அவர் ''இளவரசியின் ஜாதகப்படி சென்ற ஆண்டிலேயே கிரகங்கள் இடம் பெயர்ந்து நகர ஆரம்பித்து விட்டன. இது அவ்வளவாக அவளுக்கு நன்மை புரிவதாக



இல்லை. ஒரு கிரகம் வக்கரித்துக் கொண்டு இருப்பதால்தான் இள வரசிக்கு இப்படிப்பட்ட நிலை ஏற் பட்டிருக்கிறது. இந்த நிலை மாற இன்னமும் பதினோறு மாதம் பதி னோறு நாள் பதினாறு நாழிகை பிடிக்கும். அதன் பிறகு அவள் நிலை சரியாகி எப்போதும் போல இருப் பாள். அதுவரை அவளை ஜாக் கிரதையாகப் பார்த்துக்கொள்ள வேண்டும். இந்த அரண்மனையை விட்டு அவள் வேறு எங்காவது போய் இருக்க வேண்டும். இதை முதலில் செய்தாக வேண்டும்'' என்றான்.

ராணியோ ''இந்த நிலையில் என் மகளை எங்கே கொண்டு போய் வசதியாக இருக்கச் செய்வது?



அங்கு நாங்களும் போய் இருக்க வேண்டும். அவளை பிரிந்து இருக்க எங்களால் முடியாதே'' என்று புலம்பினாள். சோதிடர் அதற்கு எந்த பதிலும் கூறவில்லை. சற்று நேரம் மௌனம் நிலவியது.

சில நிமிடங்களுக்குப் பின் மன்னன் "நம் தலைநகரை ஒட்டியுள்ள சாரஸ சரோவரம் என்ற பெரிய ஏரியின் மத்தியில் ஒரு தீவில் நான் கோடை காலத்தில் போய் இருக்க ஒரு மாளிகையைக் கட்டி இருக்கிறேன். அங்கு எல்லா வசதிகளும் உள்ளன. இளவரசியை அங்கு அனுப்புகிறேன். அது மிகவும் அருகில் இருப்பதால் நாங்களும் இங்கிருந்து தினமும் காலையிலும் மாலையிலும் போய் வித்தியாவைப் பார்த்து வரவும் முடியும்'' என்றான்.

சோதிடரும் "ஓ! சாரஸசரோவரமா? அது இங்கிருந்து தென் கிழக்கில்தானே இருக்கிறது?'' என்று கேட்டார். மன்னனும் "ஆம்'' என்று தலையை ஆட்டினான். சோதிடரும் "அப்படியானால் இளவரசி அங்கே போய் இருப்பது எல்லாவிதத்திலும் ஏற்றதே. இன்னொரு விஷயம். இளவரசி அங்கு தனியாக எவ்வித சத்தமும் சந்தடியும் இல்லாமல் இருக்க வேண்டும். தாய் தந்தையர்களை அவள் தினமும் பார்க்கவும் கூடாது. அவளோடு ஒரு பணிப்பெண் மட்டும் இருக்கலாம். அவர்களுக்குத் தேவைப்படும் உணவை தினமும் இந்த அரண்மனையிலிருந்தே அனுப்பலாம். நீங்கள் இருவரும் அவளை மாதத்திற்கு ஒருமுறை பார்த்து வரலாம். இந்தக் கட்டுப்பாடுகள் எல்லாம் ஒரு பதினோரு மாதங்களுக்குத் தான். கிரகதோஷம் விலகியதும் இளவரசி எப்போதும் போல ஆகி விடுவாள். அப்போது அவளுக்குக் கல்யாண யோகமும் கூடி வருகிறது. அதனால் நீங்கள் எதற்கும் கவலைப் படாமல் பகவான் மீது பாரத்தைப் போட்டு விட்டு நிம்மதியாக இருங்கள். இளவரசி எந்த நல்ல வேளையில் இங்கிருந்து கிளம்பி அந்த வசந்த மாளிகைக்குச் செல்ல வேண்டும் என்பதை கணித்து வந்து சொல்கிறேன்'' எனக் கூறி விட்

டுச் சென்றார்.

மன்னன் தன் வசந்த மாளிகையில் எல்லா ஏற்பாடுகளையும் செய்யத் தன் ஆட்களை அனுப்பினான். இளவரசி பிறந்தது முதல் அவளைக் கவனித்து வந்த முதிய பணிப் பெண்ணான கமலம்மாளை வித்தியாவுடன் அனுப்புவது என ராணி தீர்மானித்தாள். அவர்கள் இருவருக்கும் தினமும் உணவு எடுத்துச் செல்ல ஆறு பணிப் பெண்களும் நியமிக்கப்பட்டார்கள்,

சோதிடர் குறித்துக் கொடுத்த வேளையில் பல்லக்கில் அமர்ந்து வித்தியா வசந்த மாளிகைக்குச் சென்றாள். அவளுக்குத் துணை கமலம்மாள்தான். வேறு யாரும் இல்லை. பல்லக்கு ஏரிக் கரையை அடைந்தது. கமலம்மாள் இளவரசியைக் கைத்தாங்கலாக அழைத்துப் போய் அங்கு தயாராக இருந்த படகில் ஏற்றினாள். படகு வசந்த மாளிகைக்குச் சென்றது. இளவரசியும் கமலம்மாளும் பத்திரமாக வசந்த மாளிகையை அடைந்து விட்டார்கள் என்ற செய்தி அரண்மனையிலிருந்த மன்னனுக்கும் ராணிக்கும் தெரிவிக்கப்பட்டது.

மன்னனும் ராணியும் தம் மகளை விட்டு இவ்வாறு பிரிந்திருக்க வேண்டி வந்ததே என வருந்தினார்கள். இனி எப்போது அவளைக் காண வேண்டும் எனச் சோதிடரிடம் கேட்க ஆவலாக அவரது வருகையை எதிர் பார்த்தும் இருந்தார்கள். இளவரசியின் நிலை பற்றி அறிந்து நாட்டு மக்களும் அவள் விரைவில் குணம் அடைய வேண்டும் என்று கடவுளை வேண்டி வந்தார்கள். இப்படியாகச் சில நாட்கள் கழிந்தன.

ஒருநாள் காலையில் வசந்த மாளிகையிலிருந்த இளவரசி திடீரெனக் காணாமல் போய்விட்டாள் என்ற செய்தி மன்னனுக்குக் கிடைத்தது. அவன் ஒரே கவலையில் ஆழ்ந்து விட்டான். நாட்டு மக்கள் அதுகேட்டு துயரக் கடலில் ஆழ்ந்தனர். (தொடரும்)






## யார் சொன்னது மேல்?

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின்மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்த பயங்கர இரவில் நீ துணிச்சலுடன் இத்தகைய செயலில் இறங்கியது பாராட்டத்தக்கதே. ஆனால் துணிச்சல் மட்டும் போதாது. உலக ஞானமும் வேண்டும். அது இல்லாவிட்டால் எந்த வேலையும் பாதியிலேயே நின்றுவிடும். உலக ஞானம் பெற்றவன் எதையும் நன்கு செய்வான். இதை விளக்க உனக்கு ஒரு கதை கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

விதேக மன்னன் விஜயசேனன் தன் அமைச்சர் அமலேந்திரர் சொல்

## வேதாளம் சொல்லும் கதை



வதைக் கேட்டே ஆட்சி நடத்தி வந்தான். அமலேந்திரரின் அறிவுத் திறமையால் விதேக நாட்டில் நல்ல விதமாக ஆட்சி நடந்தது. மக்களும் சுகமாக வாழ்ந்தனர். திடீரென உடல்நலம் குன்றி அமலேந்திரர் இறந்து போகவே விஜயசேனன் ஒரு புதிய மந்திரியை நியமித்து ஆட்சி புரிந்து வரலானான்.

புதிய மந்திரிக்கு மன்னனுக்குச் சரியான யோசனைகள் கூறத் தெரியவில்லை. அதனால் ஆட்சி சீர்கேடு அடையலாயிற்று. சிலர் மன்னனிடம் அதுபற்றிக் கூறினார்கள். ஆனால் மன்னனோ மந்திரி செய்வது எல்லாம் சரி என அடித்துக் கூறிவிட்டான்.

ராஜகுருவும் விஜயசேனனிடம் நாட்டின் நிலை மோசமாகிக் கொண்டே போவதை எடுத்துக் கூறி இப்படியே விட்டால் நாடே அழிந்து விடும் என்று எச்சரித்தார். மன்னனோ "குருவே! முன்பு அமலேந்திரரைப் பற்றிப் பலர் ஆரம்ப காலத்தில் இப்படித்தான் குறை கூறினார்கள். பிறகு எப்படி நடந்தது என்று தாங்களே அறிவீர்கள். அதுபோலத்தான் இப்போதைய மந்திரியின் செயல்களும். நாட்கள் போகப் போக இவரையும் எல்லோரும் பாராட்டுவார்கள்" என்றான்.

அது கேட்டு ராஜகுரு எதுவும் சொல்லாமல் அங்கிருந்து அமலேந்திரரின் வீட்டிற்குச் சென்றார். அமலேந்திரரின் மனைவி அவரை வணங்கி வரவேற்றாள். அவர் அவளை ஆசீர்வதித்தவாறே "அம்மணீ! உன் கணவர் அமைச்சராக இருந்தவரை அவர்கூறிய சரியான யோசனைகளின்படி இந்நாட்டு மன்னன் நடந்ததால் நாடு செழிப்புற்று சுகவாழ்வு பெற்றிருந்தது. ஆனால் இப்போதுள்ள மந்திரியோ திறமையற்றவன். அவனால் ஆட்சி சீர்குலைந்து நாடு அழிவை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது. மன்னனோ மந்திரி செய்வதே சரி எனக் கூறி தானாக எதுவும் செய்யாமல் இருக்கிறான். இந்த நிலையில் நீதான் இந்த நாடு நிலைத்து

நன்கு விளங்க உதவ வேண்டும். உன் மகன் ஞானேந்திரனுக்கு இப்போது பத்து வயதாகிறது. அவனை நீ விந்தியமலைச் சாரலிலுள்ள வித்தியாசாகரரின் ஆசிரமத்திற்கு அனுப்பிக் கல்வி கற்கச் செய். அவரிடம் சகல சாஸ்திரங்களையும் கற்று உன் மகன் அமலேந்திரரைப் போலச் சிறந்த அறிவாளியாகவும் நிர்வாக ஆற்றல் கொண்டவனாகவும் ஆகிவிடுவான். அவன் நம் நாட்டின் அமைச்சனாகி மன்னனுக்குச் சரியான யோசனைகள் கூறி நாட்டு மக்கள் சுகமாக வாழ வழி செய்வான்'' என்றார்.



அமலேந்திரன் மனைவியும் அதற்கு இசைந்து தன் மகனை வித்தியாசாகரரின் ஆசிரமத்திற்கு அனுப்பினாள். வித்தியாசாகரரும் "ஒருவன் கல்வி கற்பது தன் அறிவைப் பெருக்கிக் கொள்ளத்தானே ஒழிய மந்திரிப் பதவியை அடைவதற்காக அல்ல. எனவே நீ எல்லாவற்றையும் கற்க முயற்சி செய். உன்னை என் மாணவனாக ஏற்றுக் கொள்கிறேன்'' என்றார்.

ஞானேந்திரனும் வித்தியாசாகரரை வணங்கி "குருவே! என் தந்தை அமைச்சராக இருந்தவரை நல்ல யோசனைகளைக் கூறி ஆட்சி நன்கு நடைபெறச் செய்ததால் மன்னன் எல்லா அமைச்சர்கள் கூறும் யோசனைகள் சிறந்தவை என நம்பி விட்டான். அப்படி என் தந்தை மன்னனின் மனதில் ஏற்படுத்திய தவறான அபிப்பிராயத்தை மாற்ற வேண்டியது என் கடமை. நல்ல அமைச்சர் மன்னனுக்கு யோசனை கூறுவதோடு அவனது அறிவும் வளர உதவ வேண்டும். எல்லாவற்றிற்கும் மன்னன் தன்னையே நம்பி இருக்கும்படி அவன் செய்யக் கூடாது. என் தந்தை செய்த தவறை நான் திருத்தவே முயல்கிறேன்'' என்றான்.

வித்தியாசாகரரும் அதுகேட்டு மகிழ்ந்து "நீ கூர்மையான அறிவு படைத்தவன் என்பது உன் பேச்சிலிருந்து தெரிகிறது. உனக்கு எல்லா சாஸ்திரங்களையும் கற்பித்து இந்த குருகுலத்தை உன்னிடமே



ஒப்படைக்க நினைக்கிறேன். நீ கூறுவதில் நியாயம் உள்ளது. ஆனால் ஒன்றை மட்டும் நினைவில் கொள். கல்வி கற்பது பதவியையோ அல்லது பெரிய உத்தியோகம் பெறவோ அல்ல. உத்தியோகத்தையே குறிக்கோளாகக் கொண்டு கற்கும் கல்வி பயனற்றது'' என்றார்.

ஞானேந்திரனும் அன்றுமுதல் கல்வி பயின்று வரலானான். வித்தியாசாகரர் அவனுக்கு வேதம், அரசியல், பொருளியல், நிர்வாகம் என்று எல்லா சாத்திரங்களையும் கற்பித்தார். ஞானேந்திரன் அவற்றை எல்லாம் மூன்று வருடங்களில் கற்று குருவுக்கும் மிஞ்சினவனாக ஆகிவிட்டான். அது கண்டு வித்தியாசாகரர் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்.

ஒருநாள் வித்தியாசாகரர் தம் சீடர்களை எல்லாம் அழைத்து "உங்களில் இந்த சங்கமேஸ்வரனைத் தவிர மற்றவர்கள் எல்லோருமே நன்கு படித்து வருகிறீர்கள். என்னால் இந்த சங்கமேஸ்வரனுக்கு ஏன் சரியாகக் கற்பிக்க முடியவில்லை என்று எண்ணி வேதனைப்படுகிறேன். உங்களில் யாராவது ஒருவன் பொறுப்பு ஏற்று அவனுக்குச் சொல்லிக் கொடுத்தால் அவன் இந்த குருகுலத்திற்கு வந்து கல்வி கற்றதற்குக் கொஞ்சமாவது பலன் இருக்கும். இப்படிச் செய்பவனுக்கு எனக்குப்பின் என் குருகுலத்தை நடத்தும் உரிமையை அளிப்பேன்'' என்றார்.

அதைக்கேட்ட சங்கமேஸ்வரன் கோபம் கொண்டு "நான் இந்த மாணவர்களிடம் கல்வி பயில இங்கு வரவில்லை. இப்படி குரு எல்லோர் முன்னிலையில் கூறியது எனக்கு அவமானமாக உள்ளது. எனவே இனிமேல் நான் இங்கே படிக்கப்போவது இல்லை'' எனக் கூறிவிட்டு வெளியேறினான். அப்போது வித்தியாசாகரர் "இவன் தான் ஒரு அமைச்சனாக வேண்டும் என்ற ஒரே நோக்கம் கொண்டு படித்ததால் சரியாக எதையும் அறிந்து கொள்ள முடியவில்லை.

நாம் என்ன செய்வது!'' என்று கூறிப் பெருமூச்சு விட்டார்.

இதற்குப்பின் மேலும் மூன்று ஆண்டுகள் கழிந்தன. ஞானேந்திரனின் படிப்பும் முடிந்தது. அவன் வித்தியாசாகரரிடம் குருதட்சணையாக் என்ன செலுத்த வேண்டும் என்று கேட்டான். அவரும் ''நீ என் குருகுலத்தை நடத்தி வந்தால் அதுவே நீ எனக்குச் செலுத்தும் குருதட்சணை'' என்றார்.

அப்போது ஞானேந்திரன் ''குருவே! என் தாய் என்னை இங்கு ஏன் அனுப்பினாள் என்பது தங்களுக்குத் தெரியும். அதனால் என் தாயின் விருப்பத்தை நிறைவேற்றுவதா அல்லது தங்கள் சொற்படி நடப்பதா என என்னால் முடிவு செய்ய முடியாமல் தத்தளிக்கிறேன்'' என்றான்.

வித்தியாசாகரரும் ஞானேந்திரனை ஆசீர்வதித்து ''இந்த இளம் வயதில் நீ இவ்வளவு கூரிய அறிவு படைத்திருக்கிறாய். இது அரண்மனைக்கு மட்டும் பயன்படாமல் உலகில் எல்லோருக்கும் பயன்பட வேண்டும் என்ற நோக்கத்தில் தான் அவ்வாறு கூறினேன். நீ எது சரியானது என்று நினைக்கிறாயோ அதையே செய். அதனாலேயே மகிழ்ச்சி அடைந்து விடுவேன். நீ க்ஷேமமாகப் போய் வா'' என்று வாழ்த்தி அனுப்பினார்.

ஞானேந்திரன் விதேக நாட்டை



அடைந்தபோது அந்நாட்டு மன்னன் நாட்டை ஆளவில்லை என்றும் நோய்வாய்ப் பட்டிருப்பதாயும் தெரிந்து கொண்டான். விஜயசேனனின் மகன் சூரசேனன் மன்னனாகி ஆட்சிப் பொறுப்பையும் ஏற்றிருந்தான்.

சூரசேனன் மகா கர்வம் பிடித்தவன். எல்லாம் தனக்கே தெரியும் என்று இறுமாப்பு கொண்டவன். அவன் தான் சொல்வதற்கு 'ஆமாம்' போடுபவனையே தன் மந்திரியாக நியமிக்க விரும்பினான். அதனால் அதற்கு ஒரு தேர்வு நடத்துவதாக ஒரு நாளையும் குறிப்பிட்டான்.

ஞானேந்திரன் அதற்கு முதல் நாள் தான் தன் வீட்டை அடைந்



குலத்திலிருந்து வந்து விட்டாய் என்பது இப்போதுதான் எனக்குத் தெரிந்தது. இப்போது ஒன்றும் முடியாது என்றாகி விடவில்லை என்னோடு வா. உன்னை மன்னனுக்கு அறிமுகம் செய்து வைக்கிறேன். உன்னையும் ஒரு மந்திரியாக நியமித்துக் கொள்ளும்படி நான் அவனிடம் கூறுகிறேன். அவன் என் சொல்லைத் தட்ட மாட்டான். மன்னனுக்கு ஒரு மந்திரிதான் இருக்க வேண்டும் என்ற விதி இல்லை. பல மந்திரிகள் இருக்கலாம். உன் சேவை இந்த நாட்டிற்குத் தேவை'' என்றார்.

ஞானேந்திரன் அவர் கூறியதைச் சரி என்று ஏற்றாலும் முதலில் புதிய அமைச்சரைப் பார்க்கலாம் என்று கூறினான். ராஜகுருவும் அவனைப் புதிய மந்திரியிடம் அழைத்துச் சென்றார். அவன் வேறு யாருமில்லை. வித்தியாசாகரரால் மக்கு எனக் கருதப்பட்ட சங்கமேஸ்வரன்தான்.

இரு நண்பர்களும் நலன் விசாரித்துக் கொண்டார்கள். அப்போது ராஜகுரு தான் மன்னனிடம் சொல்லப் போகும் விஷயம் பற்றி சங்கமேஸ்வரனிடம் கூறினார். அது கேட்டு சங்கமேஸ்வரன் "நாம் இருவரும் ஒரே மன்னனிடம் பணி புரிவதில் எனக்கு மிகவும் மகிழ்ச்சியே'' என்றான்.

தான். அவனது தாயாரும் அவனை மகிழ்ச்சியுடன் வரவேற்று "நாளை மந்திரிக்கான தேர்வு நடக்கப் போகிறது. நீ அதில் கலந்து கொண்டு வெற்றி பெற்று அமைச்சனாகி உன் தந்தையைவிட அதிகப் புகழும் பெயரும் பெறவேண்டும்'' எனக் கூறினாள்.

ஆனால் மறுநாள் காலையில் ஞானேந்திரனுக்குக் கடுமையான காய்ச்சல் கண்டதால் அவன் தேர்வில் கலந்து கொள்ள முடியவில்லை. ஒரு வாரத்திற்கு பிறகே அவன் குணமடைந்து எழுந்து நடமாடலானான். அப்போது ராஜகுரு வந்து அவனைக் கண்டு "மன்னன் புது மந்திரியைத் தேர்ந்தெடுத்து விட்டான். நீ குரு

ஆனால் ஞானேந்திரனோ சங்கமேஸ்வரனை வாழ்த்தி "நான் மந்திரியாக விரும்பவில்லை. நீ பதவி ஏற்றது கேட்டு உன்னை வாழ்த்தவே வந்தேன். நம் குரு என்னிடம் தம் குருகுலத்தை ஏற்று நடத்தும்படிக் கூறினார். அவர் சொல்லைத் தட்ட முடியாது. எனவே நான் விந்தியமலைச் சாரலுக்குப் போகிறேன்" என்றான். அவன் வீட்டிற்குப் போய்த் தன் தாயை அழைத்துக் கொண்டு வித்தியா சாகரரின் குருகுலத்திற்குச் சென்று விட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னா! தாய் சொல்லைத் தட்டக்கூடாது என்று குருவிடம் கூறி விட்டு வந்த ஞானேந்திரன் ஏன் மனம் மாறி குருவின் சொற்படி நடக்கத் தீர்மானித்தான்? அவன் மக்கு எனப் பெயர் பெற்ற சங்கமேஸ்வரனுடன் சேர்ந்து வேலை செய்ய விரும்பவில்லையா? அல்லது வேறு ஏதாவது காரணமா? இக்கேள்விகளுக்கு விடைதெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் "தன் தாய் கூறிய படி நடக்கத் தீர்மானித்துக் கொண்டு குருவின் சொல்லை ஏற்காமல் ஞானேந்திரன் விதேக நாட்டிற்கு வந்தான். ஆனால் சூரசேனன் தன் மந்திரியைத் தேர்ந்து எடுத்த விதம் கண்டு அவன் மனம் மாறியது. சூரசேனனுக்கு அறிவாளி தேவை இல்லை, 'ஆமாம்' போடுபவனே தேவை என்பது அவனுக்குத் தெரிந்து விட்டது. அதனால் குரு சொன்னதே மேல் எனக் கருதி அவன் குருகுலத்திற்கே சென்று விட்டான்" என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# காது கேட்டதே!

புலியூர் ஜமீன்தாரர் தாம் ஒருவனை வேலைக்கு அமர்த்திக்கொள்வதற்கு முன் மூன்று கேள்விகளைக் கேட்பார். அவற்றிற்கு அவன் சரியான பதில் கூறினாலே அவனை வேலைக்குச் வைத்துக் கொள்வார். ஒருமுறை அவரிடம் வேலைக்குச் சேர செந்தில் என்பவன் வந்தான். அவன் முழுச் செவிடு.

ஜமீன்தாரர் அவனிடம் தம் முதல் கேள்வியாக "ஒருமுறை போனாலும் எளிதில் அதை சம்பாதிக்கலாம். அது எது?" என வினவவே செந்திலும் 'பணம்' என்றான். அவர் தமது இரண்டாவது கேள்வியாய் "ஒருமுறை போனால் மறுபடியும்கிடைக்காதது எது?" என வினவவே அவன் 'இரவும் பகலும்' என்றான். மூன்றாவது கேள்வியாக அவர் "உதவி புரிந்தவனுக்கு உதவி பெற்றவன் எவ்வளவு காலம் கடன்பட்டிருக்க வேண்டும்?" என்று கேட்கவே அவனும் 'உயிருள்ளவரை' என்றான். ஜமீன்தாரரும் அவன் தன் மூன்று கேள்விகளுக்கும் சரியான விடைகளைச் சொன்னது கண்டு திருப்தி அடைந்து அவனை வேலைக்கு வைத்துக் கொண்டார்.

ஆனால் மறுநாளே அவருக்குச் செந்தில் ஒரு செவிடன் என்பது தெரிந்து போயிற்று. அவர் செந்திலை அழைத்து "நீ நேற்று என் கேள்விகளுக்கு எப்படிச் சரியான பதில் சொன்னாய்?" என்று கேட்டார்.

செந்திலும் "நீங்கள் கேட்ட கேள்விகள் நன்றாக என் காதில் விழுந்ததே. உங்களது கேள்வி 'உனக்கு என்ன வேண்டும்?' என்பது. அதற்கு என் பதில் பணம் என்பதே. உங்களது இரண்டாவது கேள்வி 'எப்போது வேலை செய்வாய்' என்பது. அதற்கு பதில் இரவும் பகலும் என்றேன். உங்களது மூன்றாவது கேள்வி 'எவ்வளவு காலம் வேலை செய்வாய்' என்று கேட்டீர்கள். உயிருள்ளவரை என்று பதில் சொன்னேன்" என்றான்.

ஜமீன்தாரர் தம் தலையைப் பிய்த்துக் கொண்டே "அட பாவி! இப்படியா நான் கேட்டது உன் காதில் விழுந்தது!" என்று கூறிப் பலமாகச் சிரித்தார்.



# அம்புலிமாமா அனுபந்தம்—42




நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

## சிங்கம்

பழங்காலத்திலிருந்தே மிருகங்களின் மன்னனாகத் திகழ்ந்து வருவது காட்டுமிருகமான சிங்கம். பஞ்ச தந்திரக் கதைகளிலும் ஈசாப் கதைகளிலும் இது 'வன ராஜன்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. முதலில் சிங்கத்தைத்தான் நம் தேசிய மிருகமாக அறிவிக்க நினைத்தார்கள். ஆனால் இவற்றின் எண்ணிக்கை குறைந்து கொண்டே போனதால் புலிக்கு அந்த கௌரவம் அளிக்கப்பட்டது.

ஆண் சிங்கத்திற்குப் பிடரி மயிர் உள்ளதால் அது கம்பீரமாகத் தென்படுகிறது. சிங்கமும் பூனை இனத்தைச் சேர்ந்த மிருகமே. நன்கு வளர்ந்த சிங்கம் அதன் மூக்கிலிருந்து வால் வரை 275 செ. மீ நீளம் இருக்கும். 90 செ. மீ உயரத்தில் மஞ்சளும் சாம்பல் நிற உடலும் கொண்டு இது கம்பீரமாக இருக்கும். சிங்கங்கள் நான்கிலிருந்து இருபது வரை ஒன்றாக இருந்து அலைந்து திரியும்.

ஒருகாலத்தில் இந்தியா முழுவதும் பரவி இருந்த சிங்கங்களை சைபீரியாவிலிருந்து வந்த கொடூரப் புலிகள் ஒரு மூலைக்கு துரத்தி விட்டன. தற்போது குஜராத் மாநிலத்தில் குர் தேசியப் பூங்காவில் 230 சிங்கங்கள் உள்ளன.

# செய்தி நிருபர் சிறுமி!

சென்ற ஆண்டு நவம்பரில் திருனந்த புரத்தில் நடைபெற்ற உலகக் குழந்தைத் திரைப்பட விழாவின்போது பத்திரிகை நிருபர்களிடையே ஒரு சிறுமி இருந்தாள். பத்து வயதான அச்சிறுமி அயல்நாட்டுச் செய்தி நிருபர் ஒருவருடன் வந்திருப் பாள் என யாவரும் நினைத்தனர். ஆனால் அவளிடம் அவள் பெயரோடு உள்ள பத்திரிகை நிருபர் அடையாள அட்டை இருந்தது கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டனர்.

அவள் பெயர் இசோஹிக்கினெஸ். இவள் பின்லாந்து நாட்டின் தொலைக் காட்சியின் நிருபராக இந்த விழாவில் கலந்து கொள்ள வந்தாள். இந்நாட்டில் திரைப்படங்களைப் பார்த்தும் திரை உல கப் பிரமுகர்களைப் பேட்டி கண்டும் செய்திகளை பின்லாந்திற்கு அனுப்ப வும் அந்நாட்டிலிருந்து வந்த அறுவர் குழுவைச் சேர்ந்தவள் இவள்.

திருவனந்தபுரம் வந்தடைந்ததும் இவளை அங்குள்ள 'கனக குன்னு' மாளி கைக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு தான் குழந்தைகள் திரைப்பட விழா நடைபெற்றது. அந்த மாளிகை யையும் சுற்றியுள்ள இயற்கை அழகையும் கண்டு இவள் மகிழ்ந்து போனாள். அதன்பின் இரண்டு வாரங்கள் நடந்த அவ்விழாவில் பல திரைப்படங்களைக் கண்டு பெரிதும் மகிழ்ச்சி அடைந் தாள். நம் நாட்டுக் குழந்தை நட்சத்திரங் களின் நடிப்பைப் பெரி தும் பாராட்டினாள்.




விழாக் குழுவினர் ஏற்பாடு செய்திருந்த உணவுப் பண்டங்களை ரசித்து உண்டாள். குறிப்பாக இவள் பெரிதும் விரும்பியது கேரளத்தின் நேந்திரம் பழத்தைத்தான்.

நான்காவது வகுப்பில் படிக்கும் இச் சிறுமி திரைப்படங்களைப் பார்த்தும் உலக விவகாரங்களைப் பலருடன் விவா தித்தும், தன் வயதுச் சிறுவர் சிறுமியரு டன் விளையாடியும் வருவது வழக்கமாம்.

"இது வெறும் திரைப்பட விழா மட்டு மல்ல. உண்மையிலேயே கண்களுக்கு ஒரு அற்புதமான விருந்து" என்று கூறி மகிழ்ந்தாள். ஏனெனில் பின்லாந்தில் குழந்தைகளுக்காகத் திரைப்படங்கள் தயாரிப்பதே மிகமிக குறைவு. ஆனால் இந்நாட்டிற்கு வந்துதான் தன் நாட்டில் பார்த்த குழந்தைகள் படங்களைப் போல் பன்மடங்குப் படங்களை இந்த இரண்டு வார விழாவில் பார்த்து விட்டாள். அவற்றில் பல படங்கள் அவளுக்குப் பிடித்துப் போயின. குறிப் பாக 'அபயம்' என்ற மலையாளப் படம் தன்னை மிகவும் கவர்ந்ததாக இவள் கூறி னாள். ஒரு சிறுவன் தன் தாயின் 'படி, படி' என்ற நச்சரிப்பிலிருந்து விடுபட்டுத் தன் தாத்தா விடம் போய் தன் இஷ் டப்படி இருப்பதே அப் படத்தின் கதை.

இசோஹிக்கு பியோ னா வாசிக்க ஈடு பாடு உண்டாம். ஓவியம் வரைய வும் பெரிதும் விரும் புகிறாள். இவள் டென்னிஸ் ஆட்டக் காரி ஸ்டெபி கிராபின் பரமரசிகை.

# உங்களுக்குத் தெரியுமா?

1. பன்றி இனத்தைச் சேர்ந்த மிகப் பெரிய மிருகம் எது?
2. ஜிப்ஸிகளின் மொழி என்ன?
3. ஒரு நாடு முழுவதுமே ஒரு நகரம். அந்த நாடு எது? நகரம் எது?
4. பௌண்டன் பேனாவைக் கண்டுபிடித்தவர் யார்?
5. அட்லாண்டிக் கடல் மீது தனியாகவே பறந்து சென்ற முதலாவது பெண் விமானி யார்?
6. ஒரு எண்ணைத் தவிர மற்ற எண்களை ரோமன் முறையில் எழுத முடியும். அம் முறையில் எழுத முடியாத அந்த எண் எது?
7. சிவப்பு நிறக் கிரகம் எது?
8. உலகம் முழுவதிலும் தபால் பெட்டிகள் சிவப்பு நிறத்தில் தற்போது உள்ளன. இதற்கு முன் எந்த நிறத்தில் இருந்தன?
9. விசை பொம்மைகளை எங்கு முதலில் தயாரித்தார்கள்?
10. பாடிக் முறை ஓவியம் தீட்டுவது முதலில் எந்த நாட்டில் ஆரம்பமாகியது?
11. வாத்துக்கள் எப்படி நடக்கின்றன?
12. சர் ரோஜர் பானிஸ்டர் எதற்காகப் பெயர் பெற்றவர்?
13. வெள்ளை யானைகளின் பிறப்பிடம் எது?
14. டாக்டர் கிறிஸ்டியன் பர்னார்ட் 1967 ல் ஒரு புதிய அறுவை சிகிச்சை முறையைப் புகுத்தினார். அது என்ன?
15. வானவெளியில் விண்கலத்தில் 1990 முதன்முதலாக சென்றவர் யார்?

## விடைகள்

1. நீர் யானை.
2. ரோமனி.
3. வாடிகன், ரோம்.
4. லூயி வாடர்மென்.
5. அமீலியா எர்ஹார்ட் 1982-ல்.
6. பூஜ்யம்.
7. செவ்வாய் கிரகம்.
8. இலைப்பச்சை.
9. இந்தியா, எகிப்து.
10. இந்தோனேஷியா.
11. பக்கவாட்டில் அசைந்து.
12. முதன்முதலாகப் பத்து மைல் தூரத்தை 4 நிமிடங்களில் ஓடியதால்.
13. சயாம் (இன்றைய தாய்லாந்து).
14. இதயமாற்று அறுவை சிகிச்சை.
15. ஜப்பானின் டோயோ ஹீரோ ஆரியாமா.

# அம்புலிமாமா செய்திகள்

## குரங்கு நட்சத்திரம்

ஜப்பானில் 1992வது ஆண்டைக் குரங்குகள் ஆண்டாகக் கொண்டாடுகிறார்கள். இது அந்நாடு குரங்குகளுக்கு அளிக்கும் மதிப்பைக் காட்டுகிறது. நம் நாட்டில் நாம் தெருக்களில் காணும் 'குரங்காட்டம்' இப்போது ஜப்பானில் நாடக மேடைகளில் நடைபெறுகிறது. இதற்கு 'சருமனனாஷி' என்று பெயர். சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இந்தக் குரங்காட்டம் சீனாவிலிருந்து ஜப்பானுக்கு வந்ததாம். இதனை அவர்கள் ஒரு கலையாகப் பேணி வந்தார்கள். ஆனால் 1860க்குப் பிறகு வந்த 'மேற்கத்திய மாற்றம்' காரணமாக இது குறைந்து போயிற்று. இப்போது இதற்கு நல்ல ஆதரவு கிடைத்து வருகிறது. 'ஜீடோ' என்ற குரங்கு நட்சத்திரம் ஜப்பானின் தொலைகாட்சியில் வந்து புகழ் பெற்றது. அது அமெரிக்காவில் 'ஹாம்லெட்' நாடகத்தில் தோன்றி இந்த ஆட்டத்தைப் பரப்பப் போகிறது.





## மிகமிக எடையுள்ளவர்!

நியூயார்க்கின் நாஸேன் பகுதியில் வால்டர் ஹட்சன் என்பவர் இருந்தார். இவரது நிறை 544 கிலோ. இதனால் இவரது உடல் மிகப் பருமனாகி வீட்டை விட்டுக் கூட வெளியே போக முடியாமல் இருந்தார். மிகவும் சிரமப்பட்டு இவர் தன் எடையைக் குறைத்து 236 கிலோவுக்கு கொண்டு வந்தார். அப்போது கூட அவரால் வெளியே செல்ல முடியவில்லை. இரண்டு மாதங்களுக்கு முன் அவர் இறந்து போனார். அப்போது அவரது வயது 48. எடையோ 272 கிலோ. அவரது உடலை வெளியே எடுத்துச் செல்ல அவரது வீட்டு வாசலை அகலப்படுத்த வேண்டி வந்ததாம்.




பொழுதூரில் மணி என்பவன் இருந்தான். அவன் ஒரு வேலையும் செய்யாது மூக்கால் பேசி, திடீரென மூக்குப்பொடி போட்டு பலமாகத் தும்மி ஊராரைச் சிரிக்க வைத்தும் வாய்ப்பந்தல் போட்டு ஊராரை மகிழ வைத்து அவர்கள் தயவில் வாழ்ந்து வந்தான். அதனால் அவனைச் சவடால் மணி என்றே ஊரார் குறிப்பிட்டனர்.

சவடால் மணி தினமும் யார் வீட்டில் அன்று சாப்பிடுவது யாரிடம் சில்லரை தட்டுவது என்றே யோசிப்பான். அந்த ஊரில் யார் வீட்டில் எப்போது கல்யாணம் எப்போது கருமாதி என்பதெல்லாம் அவன் முன் கூட்டியே தெரிந்து கொண்டு அங்கே முதலில் போய் நிற்பான். தன் வாய்ச்சவடாலில் அந்த வீட்டாரை மயக்கி சாப்பிட்டு விட்டுச் செல்வான்.

ஒரு நாள் சவடால் மணி அவ்வூருக்குப் புதிதாக மாற்றலாகி வந்த ஒரு அரசாங்க ஊழியர் கோவிந்தன் என்பவனைப் பார்த்துவிட்டான். காய்கறிகள், வாழை இலை முதலியவற்றை வாங்கிக்கொண்டு போய்க் கொண்டிருந்த கோவிந்தனிடம் "ஓஹோ! இன்று வீட்டில் விசேஷமோ?" என்று கேட்க அவனும் "ஆமாம். குலதெய்வப்பூஜை" என்றான். சவடால் மணியும் "அடடா! இது தெரியாமல் போயிற்றே. இன்று பசுபதி வீட்டில் சாப்பிடக் கூப்பிட்டிருக்கிறார்கள். நாளை அவன் வீட்டிற்குப் போய்க் கொள்கிறேன். இன்று உங்கள் வீட்டிற்கு வந்து போஜனம் செய்துவிட்டுப் போகிறேன். நல்லவனுக்குச் சாப்பாடு போட்ட திருப்தியும் உங்களுக்கு இருக்கும்" என்றான்.

கோவிந்தனும் "சரி, மத்தி

—சிவனார் செல்வன்—



யானம் வந்து விடுங்கள்'' என்று கூறிவிட்டுச் சென்றான். ஆனால் சவடால் மணி அன்று மத்தியானம் கோவிந்தனின் வீட்டிற்குச் சாப்பிடப் போகவில்லை. பண்ணை பரமசிவம் தன் குடும்பத்தோடு இராமேஸ்வரத்திற்குக் கிளம்பிக் கொண்டிருந்தார். சவடால்மணி அவர்களோடு ஒட்டிக் கொண்டு சென்று விட்டான். பத்து நாட்களுக்குப் பிறகே அவன் ஊர் திரும்பி வந்தான்.

கோவிந்தனோ அன்று மத்தியானம் மணி சாப்பிட வருவான் எனக் காத்துப் பார்த்தான். அவன் வராது போகவே கோவிந்தன் அவன் மீது கடும் கோபம் கொண்டான். வலிய அவன் வந்து சாப்பிட வருவதாகச் சொன்னதால் தானே கோவிந்தன் அவனை அழைத்தான்? மரியாதை தெரிய வேண்டாமா என்று அவன் மனதிற்குள் புழுங்கிக் கொண்டிருந்தான்.

பத்து நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் கோவிந்தன் மணியைப் பார்த்து விட்டான். மணியும் அவனைப் பார்த்ததும் மெதுவாக நழுவ முயன்றான். ஆனால் கோவிந்தன் அவனைக் கூப்பிடவே மணியும் அவனருகே போய் "கோபித்துக் கொள்ளாதீர்கள். அன்று எனக்கு உங்கள் வீட்டில் சாப்பிட முடியாமல் போனது என் துரதிர்ஷ்டமே. இந்தப் பண்ணைப் பரமசிவம் கிடுக்கி போட்டு என்னைப் பிடித்துக் கொண்டு தம் குடும்பத்தவரோடு என்னை இராமேஸ்வரத்திற்கு அழைத்துப் போய்விட்டார். நேற்றுத்தான் திரும்பிவந்தேன். அன்று நான் வராமல் போனதால் உங்கள் மனம் என்ன பாடுபட்டிருக்கும் என்று எனக்குத் தெரியும். கவலைப்படாதீர்கள். இன்று முழுவதும் உங்கள் வீட்டில் இருந்து மத்தியானமும் ராத்திரியும் சாப்பிட்டு விட்டே போகிறேன்'' என்று கூறி அப்போதே கோவிந்தனோடு கிளம்பி விட்டான்!

கோவிந்தனின் வீட்டில் அவனது அத்தை இருந்தாள். சற்று வயதானவள். அவள் எந்த ஆணையும் 'டா' போட்டுத் தான் பேசுவாள்.

மணி வீட்டில் நுழைந்ததும் அவள் "என்னடா மணி! அன்றைக்கு ஏண்டா ஏமாற்றி விட்டாய்?" என்று கேட்டாள்.

சவடால் மணி திடுக்கிட்டான். அதுவரை அவனை யாரும் 'டேய்' என்று சொல்லிக் கூப்பிட்டது இல்லை. அவன் உடனே மூக்குப் பொடியை எடுத்துப் போட்டுக் கொண்டு 'அசுக்' கென்று ஒரு ராட்சஸத்தும்மல் தும்மினான். அத்தைக் கிழவியோ "டேய் சவ டால் மணி! உன்னைப் பற்றி எனக்கு எல்லாம் விவரமாகத் தெரி யும். இந்த மாதிரித் தும்மாதேடா. மூக்குப் பொடியை உறிஞ்சி உறிஞ்சி உன் உடம்பைக் கெடுத்துக் கொள்ளாதேடா. சரி சரி. நான் பூஜை செய்ய வேண்டும். நீ குளித்து விட்டு கைகால் அலம்ப நாலு குடம் தண்ணீர் கிணற்றிலிருந்து இழுத்து அங்கே உள்ள தொட்டி யில் நிரப்பி வையடா. 'மச' 'மச' வென்று நின்று கொண்டிருக்கா தேடா" என்று நொடிக்கு ஒரு 'டா' போட்டுக் கொண்டே போனாள்.

சவடால் மணி வெலவெலத் துப் போனான். நன்றாக உட்கார்ந்து சாப்பிட்டுவிட்டு போகலாம் என்று நினைத்து வந்த அவன் தலையில் தண்ணீர் இழுத்துத் தொட்டியில் கொட்டும் வேலை விழுந்ததே! கிணறோ வெகு ஆழம். தண்ணீர்த் தொட்டியோ நூறு குடம் விட்டாலும் நிரம்பாது போலக் காணப்பட்டது.

வேறு வழி இல்லாமல் குடத்தை



எடுத்துக் கொண்டு போய் மணி தொட்டியில் நீர் நிரப்பலானான். நாலு குடம் இழுத்துக் கொட்டிய துமே அவனுக்கு மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கியது. அதைக் கண்ட அத்தைக்கிழவி "என்னடா இது! நாலு குடம் இழுத்ததுமே களைத் துப் போய்விட்டாயா? சரி, சரி, இன்னும் இரண்டு குடம் இழுத்து கொட்டிவிட்டு சாப்பிட வாடா" என்றாள்.

மணி சாப்பிட உட்கார்ந்ததும் அத்தைக் கிழவி பரிமாறினாள். அவன் சாப்பிடும் வேகத்தையும் அளவையும் கண்ட அவள் "டேய்! நான் நிறையச் சமைத்து வைத் திருக்கிறேன் என்பதற்காக இப்படியா பகாசுரன் போலச் சாப்பிடுவது? உனக்கு சங்கோசமே கிடையாதா? கிடைத்ததையெல்லாம் முழுங்கு கிறாயேடா. இப்படி சாப்பிட் டால் உன்னை யார் மறுதடவை சாப்பிடக் கூப்பிடுவார்கள்?" என்றாள்

மற்றவர்களிடம் வாய் சவ டால் அடிக்கும் மணி அந்த அத்தைக் கிழவியின் முன் எதுவும் பேச முடியாமல் தவிக்கலானான். அவன் ஒருவாறு சாப்பிட்டு எழுந் திருக்கும் போது அத்தைக்கிழவி "நீ சாப்பிட்டகையோடு அந்த எச்சில் இலையையும் எடுத்து தூர எறி. உன் போன்ற சோம்பேறிகள் சாப்பிட்ட இலையை நான் எடுத் துப் போட்டால் அது மகாப்பாவம். இலையை எடுத்த பின் கொஞ்சம் தண்ணீர் தெளித்து அந்த இடத் தையும் துடைத்து விடு" என்றாள்.

சவடால் மணி அத்தைக்கிழவி கூறியதை எல்லாம் செய்துவிட்டு உடனேயே அங்கிருந்து கிளம்பி விட்டான். அன்றிரவு சாப்பாட் டிற்கு அவன் கோவிந்தனின் வீட் டிற்குப் போகவில்லை. அன்று முதல் அவன் பிறர் வீட்டிற்கு தானே போய் சாப்பிடுவதை நிறுத்திவிட்டு வேலை செய்து சம்பாதித்துச் சாப்பிடலானான்.






# வெறும் கற்பனையே!

**மா**ளவ மன்னன் மாதவசேனன் தனக்கு ஒரு புதிய அந்தரங்க ஆலோசகனை நியமித்துக் கொள்ள விரும்பினான். அதுவரை அவனது ஆலோசகராக இருந்த பாஸ்கர பட்டர் வயதான காரணத்தாலும் நோய்வாய்ப்பட்டு விட்டதாலும் மன்னன் புதிய ஒருவனை அப் பதவிக்கு நியமிக்க விரும்பினான்.

அது பற்றி அவன் தன் அமைச் சர் சுரேந்திரருடன் கலந்து ஆலோ சிக்கவே அவரும் "அரசே! நம் நாட்டில் அரசியல், பொருளியல், நீதித்துறை, ஆட்சித்துறை எனப் பலதுறைகளில் நன்கு படித்தவர் கள் இருக்கிறார்கள். இப்பதவிக்கு அறிவிப்பு செய்தால் அவர்களில் பலர் தங்களைக் காண வருவார் கள். அவர்களுக்குத் தேர்வு நடத்தி நன்கு படித்த ஒருவரைத் தேர்ந் தெடுக்க நாம் பாஸ்கரபட்டரின் உதவியை நாடலாம்" என்றார்.

மன்னனும் அவ்வாறே செய்ய லாம் எனக்கூறவே அமைச்சர் நாடெங்கிலும் பறை சாற்றுவித்து அந்தரங்க ஆலோசகர் பதவிக்கு தகுதி உடையவர்கள் குறிப்பிட்ட ஒரு நாளில் தேர்வுக்கு வரலாம் என அறிவித்தார்.

குறிப்பிட்ட நாளில் பல இளை ஞர்கள் தேர்வுக்கு வந்தார்கள். அவர்களுக்கு நடந்த தேர்வில் ஞானமணி, நவமணி என்ற இரு வர் யாவரிலும் முன்னதாக வந்த னர். ஆனால் இருவரும் எல்லா விஷயத்திலும் சமமாக இருந்ததால் அவர்களில் யாரைத் தேர்ந்தெடுப் பது என்று முடிவு செய்ய அமைச்சர் பாஸ்கரபட்டரை அணுகினார்.

பாஸ்கரபட்டரும் "இப்பதவிக்கு வெறும் புத்தகப்படிப்பு இருந்தால் மட்டும் போதாது. சிக்கலான

—எஸ். சோபினி—



பிரச்னைகளைச் சமாளித்து நல்ல முடிவுகாணத் திறமை பெற்றவராக இருக்க வேண்டும். அவர்கள் இருவருக்கு மட்டும் நான் கூறும் பரீட்சை வைத்து அதில் தேர்ந்தவனைப் பதவிக்கு நியமியுங்கள்'' எனக்கூறி அத்தேர்வு நடத்த வேண்டிய விதத்தையும் கூறினார்.

மறுநாள் அமைச்சர் சுரேந்திர ஞானமணியையும் நவமணியையும் அழைத்து சற்று நேரம் வரை எதேதோ கூறிப் பிறகு திடீரென வருத்தம் அடைந்து "இன்று காலை என் நண்பரின் உடல் நிலை மிகவும் மோசமாகி விட்டது. அவரது நிலை பற்றி நீங்கள் தெரிந்த கொள்ளவும் வேண்டும். நான் விவரமாகக் கூறுகிறேன். கவனமாகக் கேளுங்கள்'' எனக்கூறி விவரிக்கலானார்.

"என் நண்பர் இன்று காலை என்னிடம் கூறியதை அப்படியே கூறுகிறேன். என் நண்பர் வயதானவர். இதய நோயாளி, ஒரு நாளிரவு அவர் பயங்கரமான கனவு ஒன்றைக் கண்டார். அந்தக் கனவில் அவர் ஒரு அடர்ந்த காட்டிற்குள் வழி தவறிப்போய் விட்டார். அவர் ஒரு இடத்தில் நான்கு பாதைகள் சேர்வதைக் கண்டார். மங்கிய இரவில் நட்சத்திர ஒளியில் அவர் அவற்றில் ஒரு பாதையைத் தேர்ந்தெடுத்து நடந்து சென்றார். வழிநெடுக மரங்களும் முட்புதர்களுமாக இருந்தன. அங்கு சில சிங்கங்கள் திரிந்து கொண்டிருந்தன. அவற்றில் ஒன்று அவரைப் பார்த்து விட்டு அவரை நோக்கிப் பாய்ந்து வந்தது.

என் நண்பர் பயந்து வந்தவழியே ஓடி மறுபடியும் நான்கு பாதைகள் சேரும் இடத்தை அடைந்தார். இரண்டாவது பாதையில் பயமில்லாது நடந்து சென்றார். கொஞ்ச தூரத்தில் ஏதோ வெளிச்சம் இருந்தது கண்டு அங்கு சென்றார். அங்கு பல பாம்புப் புற்றுகள் இருப்பதையும் அவற்றின் மேல் பல பாம்புகள் படமெடுத்து ஆடுவதையும் கண்டார். அவற்றில் ஒன்று ஐந்து தலைநாகம். அந்தப் பாம்புகளின் தலைகளிலிருந்த ரத்தினங்களின் ஒளியே அங்கு வீசிப் பரவியது.

அவரைக் கண்ட ஐந்து தலைப் பாம்பு சீறவே அவர் பயந்து வந்த வழியே திரும்பி ஓடி மீண்டும் நான்கு பாதைகள் சேரும் இடத்தை அடைந்தார்.

பிறகு அவர் மூன்றாவது பாதையில் நடந்து செல்லலானார். கொஞ்ச தூரம் சென்றதும் அது ஒரு மலை அடிவாரத்தில் போய் முடிந்தது. அங்கு பல மனித எலும்பு கூடுகள் இருப்பதைக் கண்டு மலைத்து நின்றார். அப்போது அந்த மலையில் ஒரு குகையிலிருந்து பயங்கர ராட்சஸன் ஒருவன் உறுமிக் கொண்டு வந்தான். அவனைக் கண்டு பயந்த என் நண்பர் வந்த வழியே திரும்பி ஓடி மறுபடியும் நான்கு பாதைகள் கூடும் இடத்தை அடைந்தார்.

இம்முறை அவர் நான்காவது பாதையில் சென்றார். அவர் கொஞ்ச தூரம் சென்றதும் தன் பின்னால் ராட்சஸன் வருவது கண்டுபயந்து வேகமாக ஓடினார். அவர் ஒரு பாறையின் விளிம்பை அடைந்து விட்டார். அங்கிருந்து போக வழியில்லை. பாறையின் கீழ்வெகு ஆழத்தில்தான் நிலப்பரப்பு தெரிந்தது. அவர் ராட்சஸனுக்கு பயந்து நின்ற போது கால்கள் நடுங்க பாறையிலிருந்து தவறி கீழே படுபாதாளப் பள்ளத்தில் விழுந்து விட்டார்.

அமைச்சர் தம் நண்பர் கண்ட இந்தக் கனவைக் கூறி "பார்த்தீர்களா எவ்வளவு பயங்கரமான கனவு என்று! இதய நோயாளியான என் நண்பர் இந்தக் கனவைக்



கண்டு முடித்ததும் கண் விழித்தார். மறுவினாடியே அவரது இதயத் துடிப்பு நின்றது. அவர் இறந்து போய் விட்டார்'' என்றார்.

அப்போது நவமணியும் பயந்து போய் மெதுவாய்த் தாழ்ந்த குரலில் ''கனவில் காணும் காட்சிகள் கூட மனிதனின் உடல் நலனை பாதிக்கின்றன. தங்களது நண்பர் நான்கு முறைகளில் பயந்து ஓடி இருக்கிறார். அந்தப் பயம் அவரைப் பெரிதும் பாதித்திருக்கிறது. கண் விழித்தும் இதய நோயாளியான அவர் பயத்தால் இதயம் தாக்கப்பட்டு உயிரை இழந்திருக்க வேண்டும். உங்களது நண்பரின் பிரிவால் உங்களுக்குப் பெரும் துயரமே ஏற்பட்டுள்ளது'' என்றான்.

அதைக் கேட்டபின் அமைச்சர் ஞானமணியைப் பார்க்கவே அவன் சிரித்தவாறே ''ஆகா! என்ன அருமையான கட்டுக்கதை'' என்றான். அமைச்சரும் ''கட்டுக்கதையா? ஏன் அப்படிக் கூறுகிறாய்?'' என்று சற்று கோபப்பட்டவர் போலக் கேட்டார்.

ஞானமணியும் பணிவுடன் ''தங்கள் நண்பர் இந்த பயங்கரக் கனவைக் கண்டதும் உடனே கண் விழித்தார் என்றும் மறுவினாடியே அவரது இதயத்துடிப்பு நிற்கவே அவர் இறந்து விட்டார் என்று கூறினீர்கள். நீங்களோ உங்கள் நண்பரே இந்தக் கனவை உங்களிடம் கூறியதாகச் சொன்னீர்கள் அது எப்படி முடியும்? அவர்தான் கனவைக் கண்டு கண் விழித்தும் இறந்து போய் விட்டாரே. அதனால் அவர் எப்படி இந்தக் கனவைத் தாமே உங்களிடம் சொல்லி இருக்க முடியும். முடியவே முடியாது. அதனால்தான் இது கட்டுக்கதை என்றேன்'' என்றான்.

அமைச்சர் சுரேந்திரர் ஞானமணியைப் பாராட்டி அவனையே மன்னனின் அந்தரங்க ஆலோசகனாகத் தேர்ந்தெடுத்தார்.






இலங்காபுரியை முற்றுகை இடுவது திட்டமிட்டபடி நடந்தது. சுக்கிரீவன் பெரும் படையுடன் மேற்கு, வடக்கு வாசல்களுக்கு இடையே எந்த நேரத்திலும் உதவிக்குச் செல்லத் தயாராக நின்றான். வானரர்கள் மரக்கிளைகளையும் கற்களையும் எடுத்துக் கொண்டு போர்புரிய நின்றனர். இலங்கையை வானரப்படை சூழ்ந்து கொண்டது. அவர்கள் எழுப்பிய ஒலி விண்ணிலே எதிரொலித்தது.

அப்போது இராமர் இராவணனிடம் அங்கதனைத் தூது அனுப்பி சமாதானத்திற்கு வழிகாண முயன்றார். அங்கதனும் இராவணனின் தர்பாருக்குப் போய் இராமர் சொல்லச் சொன்னதை அப்படியே தெரிவித்தான்.

"இராவணா! பிரம்மதேவ்ரிடம் நீ வரம்பெற்ற கர்வத்தால் பல பாவச்செயல்களைப் புரிந்திருக்கிறாய். என் மனைவியைக் கவர்ந்து வந்திருக்கிறாய். அதனால் உனக்கு நான் எமனாக வந்திருக்கிறேன். இலங்கையை முற்றுகை இட்டுவிட்டேன். உன் வீரபராக்கிரமத்தைக் காட்டப் போகிறாயா அல்லது என்னிடம் சரணடையப் போகிறாயா? என்னால் உலகில் ஒரு ராட்சஸன் கூட இல்லாமல் செய்துவிட முடியும். போர் அல்லது சமாதானம். இந்த இரண்டில் ஒன்றைத் தேர்ந்து எடு. எங்காவது தப்பி ஓடிவிடலாம் என்று கனவில் கூட நினைக்காதே. அப்படிச் செய்யவும் முடி

-இந்திரஜித்தின் மாயப்போர்-



யாது. போர்தான் என நீ முடிவு செய்து விட்டால் இப்போதே உன் இலங்கையை நன்றாகப் பார்த்துவிடு. ஏனெனில் போருக்குப்பின் இந்த இலங்கை இராது. நீயும் என் அம்பிற்கு இரையாகி விடுவாய்."

இந்தச் செய்தியை அங்கதன் கூறியதும் அதைக் கேட்ட இராவணன் மிகவும் கோபம் கொண்டான் அவன் ஆத்திரத்தோடு "இந்தக் குரங்கைப் பிடித்துக் கொல்லுங்கள். என்னென்னவோ இது பிதற்றுகிறது" என்று கத்தினான். உடனே நான்கு ராட்சஸர்கள் பாய்ந்து வந்து அங்கதனைப் பிடித்துக் கொண்டார்கள்.

அங்கதன் அவர்களுக்குக் கட்டுப்படுபவன் போல நடித்தான். அவர்கள் அவனைப் பிடித்த மறுவிநாடியே அவர்களைத் தன் இருகைகளாலும் இறுக்கிகொண்டு உயரக் கிளம்பி தர்பாரிலிருந்து வெளியே வந்து ஆகாய வழியே சென்றான். போகும்போது இராவணனின் அரண்மனையின் மேலிருந்த தங்க கலசங்களை உடைத்து எறிந்தான். பிறகு தான் தூக்கி வந்த ராட்சஸர்களையும் தரையின்மீது விட்டெறிந்தான். பிறகு அவன் "அடே! இராவணா! நான் யார் தெரியுமா? உன்னை பத்துத்தலைப் பூச்சி என கூறி கட்டி எடுத்து வந்து நான் விளையாடக் காட்டிய வாலியின் மகன் அங்கதன். அதைத் தெரிந்து கொள்" எனக் கூறியவாறே சென்றான்.

அங்கதனின் இந்தச் செயல் இராவணனுக்கு ஒரு கெட்ட சகுனம் போலத் தெரிந்தது. அவன் நடந்ததைக் கண்டு மலைத்துப் போய் ஒரு பெருமூச்சு விட்டுக் கவலையில் ஆழ்ந்தான்.

வானரர்கள் போர்புரியத் துடித்துக் கொண்டிருந்தார்கள். சுக்கிரீவனின் கட்டளைப்படி மிகப் பெரிய உருக்கொண்ட சுஷேணன் சில வானர வீரர்களோடு இலங்கைக் கோட்டையைச் சுற்றிச் சுற்றி வந்தான். வேறு பல வானரர்களும் இலங்கைக் கோட்டையைச் சுற்றிச் சுற்றி வந்தார்கள். ஆயுதங்

களை ஏந்தி ஆரவாரம் செய்த வாறு இருந்தார்கள்.

சில ராட்சஸர்கள் இராவணனி டம் சென்று இலங்கைக் கோட் டையை வானரப் படைகள் நாலா புறமும் சூழ்ந்து கொண்டு முற் றுகை இட்டுள்ளதைத் தெரிவித்தார் கள். அதைக்கேட்ட இராவணன் தன் அரியாசனத்தின் மீதிருந்து இறங்கித் தன் அரண்மனையின் மேல் தளத்திற்குச் சென்று சுற்றி லும் பார்த்தான். எங்கு பார்த்தா லும் வானரர்களே இருப்பதைக் கண்டான். இவ்வளவு வானரர் களையும் எப்படிக் கொல்லப் போகிறோம் என எண்ணி அவன் மலைத்து நின்றான்.

இராமரும் இலங்காபுரியை ராட் சஸப் படைகள் நன்கு பாதுகாத் துக் கொண்டு இருப்பதைக் கண் டார். இப்படி பலத்த காவல்கட்டுப் பாடுடன் இருக்கும். இலங்கைக்குள் தானே சீதை சிறை வைக்கப்பட்டி ருக்கிறாள் என நினைக்க நினைக்க அவருக்குக் கோபமும் துக்கமும் மாறிமாறி வரலாயின. அவர் உடனே படைகளைப் பார்த்து "உம் எதிரிகளை எதிர்த்துப் போரிட்டு முற்றிலும் ஒழியுங்கள்" என்று உரக்கக் கூறினார்.

வானரர்கள் தாம் மரங்களை வேரோடு பிடுங்கிக் கொண்டும், மரக்கிளைகளை ஒடித்து எடுத்துக் கொண்டும், கற்களைத் தூக்கிக்



கொண்டும் தாக்குதலுக்குத் தயாராக நின்று கொண்டிருந்தார்களே. இரா மர் தாக்கக் கூறியதும் அவர்கள் கோட்டை மதில் மீது தாவலானார் கள். கோட்டை வாசல்களைத் தாக்கலாயினர்.

விபீஷணன் கவசம் தரித்துக் கொண்டு இராமரின் அருகிலேயே நின்று கொண்டிருந்தான். கஜன், கவயன், கவாட்சன், சரபன், கந்த மாதனன் ஆகியோர் எங்கும் சுற்றிய வாறே வானரப் படைகளைப் பாதுகாப்பதில் ஈடுபட்டனர்.

இராவணனும் தன் படையைப் போர் துவக்குமாறு கட்டளை இட் டான். ராட்சஸர்களும் கத்திக்கொண் டும் கூச்சல் போட்டுக் கொண்டும் கிளம்பினார்கள். முரசுகளை முழக்



கினார்கள். ஆவேசம் பொங்க ராட்சஸ வீரர்கள் இலங்கைக் கோட்டைக்குள்ளும் வானர வீரர்கள் கோட்டைக்கு வெளியிலும் கூச்சலிட்டுக் கொண்டும் குதித்துக் கொண்டும் இருந்தனர்.

இருதரப்பினருக்கும் இடையே பலத்த போர் மூண்டது. ராட்சஸர்கள் கதைகளாலும், ஈட்டிகளாலும், சூலாயுதங்களாலும் கோடாலிகளாலும் தாக்கவே வானரர்களோ தாக்குதலுக்கு மரங்களையும், மரக்கிளைகளையும் கற்களையும் உபயோகப்படுத்தினார்கள். அவர்களது கைகளிலும் கால்களிலும் வளர்ந்திருந்த நகங்களும் போர் ஆயுதங்களாகின.

நான்கு ராட்சஸர்கள் இராமர் மீது அம்புகளை எய்தார்கள். இராமர் தம் அம்புகளால் அந்த நால்வரின் தலைகளையும் துண்டித்து வீழ்த்தினார். மைந்தன் வஜ்ஜிர முஷ்டி என்ற ராட்சஸனைத் தன் கைப்பிடியாலே குத்திக் கொன்று வீழ்த்தினான். சுஷேணன் வித்யுத்மாலி என்ற அரக்கனைத் துரத்திக் கொன்றான்.

இந்திரஜித் அங்கதனுடன் போர் புரிந்தான். விபீஷணனின் அமைச்சர்களில் ஒருவனான சம்பாதி என்பவன் பிரஜம்சன் என்பவனோடு சண்டை போட்டான். அனுமான் ஜம்புமாலியைத் தாக்கலானார். கஜன் தபஸன் என்ற அரக்கனோடும் நீலன் நிகும்பன் என்ற ராட்சஸனோடும் போர் புரிந்தார்கள். சுக்கிரீவன் பிரகசன் என்ற ராட்சஸனோடும் லட்சுமணன் விருபாட்சன் என்ற அரக்கனோடும் போர்புரிந்தார்கள். இப்படியாக இருவரிடையே போர் என்பது வானரர்களுக்கும் ராட்சஸர்களுக்கும் இடையே மும்முரமாக நடந்தது.

இந்தச் சண்டையில் அங்கதன் இந்திரஜித் ரதத்தை முறித்து தேரோட்டியையும், அதன் குதிரைகளையும் கொன்றான். சம்பாதி பிரஜம்ஷனைக் கொன்றான். அனுமார் ஜம்புமாலியை அடித்து வீழ்த்தினார். நளன் பிரதிபசன் என்ற ராட்சஸனின் கண்களைப்



பிடுங்கி எறிந்தான். சுக்கிரீவன் பிரகசனைக் கொன்றான். இப்படியாக வானர வீரர்கள் பலராட்சஸ வீரர்களைக் கொன்றார்கள்.

அப்போது மாலைப் பொழுதும் கழிந்து இருட்டியும் விட்டது. ஆனால் போர் நிற்கவில்லை. இராட்சஸர்கள் போர் களத்தில் திரிந்து வானரர்களைப் பிடித்துக் கொன்று விழுங்கலானார்கள். வானரர்கள் இருட்டில் ராட்சஸர்கள் அணிந்திருந்த தங்க நகைகளாலும், வெள்ளை நிறத் தந்தங்களாலும் அடையாளம் கண்டு கொண்டு அவர்களைப் பிடித்துக் கொன்றார்கள். அந்த மை இருட்டில் இராமரும் லட்சுமணனும் அம்புகளை எய்து பலராட்சஸர்களைக் கொன்றார்கள்.

தனது தேரையும் தேரோட்டியையும் குதிரைகளையும் இழந்தபின் இந்திரஜித் மாயப்போர் புரியலானான். அவன் நாகாஸ்திரத்தை எய்து இராமரையும் லட்சுமணனையும் கட்டிப்போட்டுவிட்டான். அவன் அவர்களிடம் "நான் மாயப்போர் புரிந்தால் இந்திரன்கூட என்னை வெல்ல முடியாது. அற்ப மனிதர்களான நீங்கள் எம்மாத்திரம்? உங்கள் உயிரையே போக்கிவிடுகிறேன்" எனக் கர்ஜித்தான்.

அம்புகள் அவ்விருவர் மீதும் நிறைந்து இருந்ததால் அவர்களுக்கு எதுவுமே தென்படவில்லை. இந்திரஜித் எய்த அம்புகள் அவர்களை நினைவு இழக்கச் செய்தன. அவர்கள் அசையாமல் தரைமீது விழுந்து கிடந்தார்கள். அனுமாரும் மற்ற வானர வீரர்களும் அவ்விருவர் விழுந்து கிடந்த இடத்தில் நின்றுகொண்டு கண்ணீர் வடிக்கலானர்கள். இந்திரஜித் எங்கே என்று அவர்கள் நாலாபுறத்திலும் பார்த்தார்கள். ஆனால் அவன் தென்படவே இல்லை. விபீஷணனால் மட்டும் மாயாசக்தியைக் கொண்டு அவனைக் காண முடிந்தது.

அப்போது இந்திரஜித் ராட்சஸர்களிடம் "பார்த்தீர்களா! இந்த இராமனையும் லட்சுமணனையும் நாகாஸ்திரத்தால் கட்டு அம்புகளை எய்து கொன்று விட்டேன்"



என்று கூறினான். பிறகு வானரர் களைத் தாக்க ஆரம்பித்தான். வானரர்களோ என்ன செய்வது என்று திகைத்து நின்றார்கள். அவர்கள் இராமரும் லட்சுமண னும் இறந்துபோய்விட்டதாகவே எண்ணி விட்டார்கள்.

சுக்கிரீவன் கூட பயந்தே போனான். ஆனால் விபீஷணன் எல்லோரையும் பார்த்து "கவலைப் படாதீர்கள். இராமரும் லட்சுமண னும் இறந்துவிடவில்லை. தம் நினைவை இழந்துதான் போயிருக் கிறார்கள். போரில் இப்படி எல் லாம் நடப்பது இயல்பே. இதற் காக மனம் உடைந்து போய் விடக் கூடாது. அவர்கள் இன்னும் சற்று நேரத்தில் சுயஉணர்வு பெற்று எழுந்து விடுவார்கள் கவலைப் பட வேண்டாம்" என்றான்.

இலங்கைக்குச் சென்ற இந்திர ஜித் நேராக இராவணனிடம் போய் "நான் இராமனையும் லட்சுமணனை யும் கொன்று விட்டேன்" என்று கூறினான். அது கேட்டு இராவணன் மகிழ்ந்து போய்த் தன் மகனைப் பாராட்டி அவர்கள் எப்படி இறந் தார்கள் என்பதை விவரமாகச் சொல்லும்படிக் கேட்டான்.

இந்திரஜித்தும் தான் அவர்களை நாகாஸ்திரத்தால் கட்டி அம்பு களால் அடித்து தரையில் வீழ்த்தி யதையும் அவர்கள் தரை மீது விழுந்து அசையாமல் கிடந்ததையும் கூறினான். இராவணனும் அவனை அனுப்பிவிட்டு சீதைக்கு காவலாக உள்ள பெண்களை அழைத்து வரச் சொன்னான். அவர்கள் வந்ததும் அவன் "இந்திரஜித் இராமனையும் லட்சுமணனையும் கொன்று விட் டான் என்று சீதையிடம் சொல் லுங்கள். அவ்ளைப் புஷ்பக விமானத்தில் ஏற்றி போர்க்களத் திற்கு அழைத்துப் போய் ராமனும் லட்சுமணனும் விழுந்து கிடப்பதைக் காட்டுங்கள். இனிமேல் சீதைக்கு என்னை விட்டால் வேறு யாரும் இல்லை என்பதையும் கூறுங்கள்" என்றான்.

ராட்சஸிகளும் சீதையைப் புஷ் பக விமானத்தில் ஏற்றிக் கொண்டு போர்களத்திற்கு போய் அங்கு இரா

மனும் இலட்சுமணனும் விழுந்து கிடப்பதை காட்டினார்கள். வானரர் கள் கண்ணீர் விட்டு வாடிய முகத் தோடு நிற்பதைக் கண்டு சீதை துக்கத்தைத் தாங்க முடியாது போனாள்.

அப்போது அவளுக்கு சோதிடர் கள் அவளைப் பற்றிக் கூறியது எல்லாம் நினைவிற்கு வந்தது. அவர் கள் அவளுக்குக் குழந்தை பிறக் கும் என்று கூறினார்கள். அவளுக்கு விதவைக் கோலமே வராது என் றும் அவளது கணவன் அசுவமேத யாகம் செய்வாரென்றும் கூறினார் கள். அவள் மாபெரும் ராஜ்யத்தின் பட்டத்து ராணி ஆவாள் என்றார் கள். இப்படி அவர்கள் சொன்னது எல்லாம் பொய்தானா என எண்ணி மனம் பதைத்தாள்.

அப்போது அவளோடு வந்த திரிசடை அவளைத் தேற்றி, இராமரும் லட்சுமணனும் இறக்க வில்லை என்றும் அவர்கள் மயக் கம் அடைந்து விழுந்து கிடக்கிறார் கள் என்று கூறினாள். ராட்சஸப் பெண்மணிகள் சீதையைப் புஷ்பக விமானத்தில் ஏற்றித் திரும்ப அசோக வனத்திற்கு அழைத்து சென்றார்கள்.

சற்று நேரத்திற்குப் பின் முதலில் ராமர் மயக்கம் தெளிந்து எழுந் தார். ஆனாலும் அவரது உடல் அம்புகளால் கட்டப்பட்டு இருந் தது. அவர் தன்னருகே விழுந்து கிடந்த லட்சுமணனைப் பார்த்தார். அவர் துக்கத்தால் மனம் வெதும்பி லட்சுமணன் இறந்து விட்டால் தனக்கு உலகில் இனி எந்த வேலையும் இல்லை என்று கூறி னார். விபீஷணனைத் தன்னால் மன்னனாக்க முடியவில்லையே என வருந்தினார். சுக்கிரீவனை வானரப் படைகளோடு கிஷ்கிந்தைக்குத் திரும்பிப் போய் விடும்படி கூறி னார். இராமரது துயரம் கண்டு எல்லா வானரர்களும் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு நின்றார்கள்.






# நீதி கிடைத்தது

ஒரு காலத்தில் ஒரு சுல்தான் தன் மக்களுக்கு ஏழை பணக்காரன் என்ற வித்தியாசம் பாராட்டாமல் நியாயம் வழங்கி வந்தான். ஒருநாள் அவன் தர்பாரில் இருக்கும் போது ஒரு மனிதன் தன் கையில் ஒரு பையை வைத்துக் கொண்டு தயங்கி நிற்பதைக் கண்டான்.

சுல்தான் அவனைத் தன்னருகே அழைத்து "நீ என்னிடம் ஏதோ சொல்ல விரும்புவது தெரிகிறது. என்ன விஷயம்? பயப்படாமல் சொல்" என்றான். அவனும் "சுல்தான் அவர்களே! நான் ஒரு வியாபாரி. என்னை ஒருவர் ஏமாற்றி விட்டார். அவர் வேறு யாருமில்லை. இந்நகரில் நீதி வழங்க நியமிக்கப் பட்டிருக்கும் காஜிதான். நான் கஷ்டபட்டு சேர்ந்து வைத்திருந்த இரண்டாயிரம் தங்கக் காசுகளை இந்தப் பையில் போட்டு அதன் வாயைக் கட்டி முத்திரை இட்டு இதனை நான் வெளியூருக்குப் போவதற்கு முன் இந்நகரக் காஜியிடம் கொடுத்து பத்திரமாக வைத்திருக்குமாறும் நான் திரும்பி வந்து வாங்கிக் கொள்வதாயும் கூறி ஒப்படைத்தேன். நான் வெளியூர் போய் விட்டு ஆறு மாதங்களான பின் நேற்றுத்தான் இவ்வூருக்கு வந்தேன். நான் காஜியிடம் போய் என் பையைக் கேட்டேன். அவரும் என் பையை எடுத்து கொடுத்தார். அதில் நான் வைத்த முத்திரை கலையாமல் இருக்கவே பையை வாங்கிக் கொண்டு சென்றேன். வீட்டில் போய்ப் பையைத் திறந்து பார்த்தால் தங்க நாணயங்களுக்கு பதிலாக அதில் செப்புக் காசுகளே இருந்தன" என்றான்.

சுல்தானும் அந்தப் பையை வாங்கிப் பார்த்தவாறே "சரி பை

—அராபியப் பழங்கதை—

என்னிடம் இருக்கட்டும். நான் உனக்கு நீதி கிடைக்கச் செய்கிறேன்'' என்றான். தர்பார் முடிந்ததும் சுல்தான் தன் மாளிகைக்குச் சென்றான். அவன் மனம் வியாபாரி கொடுத்த புகார் பற்றியே எண்ணிக் கொண்டிருந்தது. எல்லா விதத்திலும் பை சரியாக இருந்தும் அதனுள்ளிருந்த தங்க நாணயங்கள் அகற்றப்பட்டு பதிலுக்கு செப்புக்காசுகள் எப்படி வைக்கப் பட்டன என்பதைக் கண்டுபிடித்தாக வேண்டும்.

சுல்தானுக்குச் சட்டென ஒரு உபாயம் தோன்றியது. உடனே அவன் தர்பார் மண்டபத்திற்குள் சென்றான். அப்போது யாரும் இருக்கவில்லை. தன் சிம்மாசனத்தின் மீது விரிக்கப்பட்டிருந்த கம்பளத்தை எடுத்து இரண்டு மூன்று இடங்களில் கிழித்து அதனை முன் போல சிம்மாசனத்தில் விரித்து விட்டுத் தன் மாளிகைக்குத் திரும்பி வந்தான். அவன் மறுநாள் காலையிலேயே தன் குதிரை மீது அமர்ந்து வேட்டையாடக் காட்டிற்குக் கிளம்பிவிட்டான்.

தர்பாரைப் பெருக்கி சுத்தம் செய்யும் வேலையாள் அன்று சிம்மாசனத்தின் மீதுள்ள தூசியைத் தட்டும் போது அதன் மீது விரிக்கப்பட்ட கம்பளம் கிழிந்திருப்பதைக் கண்டான். அவன் பயந்து ஓடிப் போய்த் தன் மேலதிகாரியிடம் அது பற்றிக் கூறினான்.

அந்த அதிகாரியும் தர்பாருக்கு வந்து கம்பளத்தைப் பார்த்து விட்டு ''கவலைப்படாதே. இந்நக



ரில் கிழிசல் தெரியாமல் தைத்துக் கொடுக்க தையல்க்காரன் தாஜுத்தின் என்பவன் இருக்கிறான். அவனை நீ அழைத்து வா'' என்றான். அந்த வேலையாளும் ஓடிப்போய்த் தையல்க்காரனை அழைத்து வந் தான். தையல்க்காரனும் இரண்டு தங்க நாணயங்களைத் தையல் கூலியாக வாங்கிக் கொண்டு கம் பளத்தைத் தைத்துக் கொடுத்தான். அது கிழிந்து தைக்கப்பட்டது போல்த் தெரியாமல் புத்தம் புதிது போல இருந்தது!

அன்று மாலை வேட்டையாடி விட்டுத் திரும்பி வந்த சுல்தான் நேராக தர்பார் மண்டபத்திற்குச் சென்றான். சிம்மாசனத்தின் மீதிருந்த கம்பளத்தைப் பார்த்து விட்டு அந்த மண்டபத்தைப் பெருக்கி சுத்தம் செய்யும் வேலை யாளை அழைத்து ''இந்தக் கம்ப ளம் கிழிந்திருந்ததே. யார் இதைத் தைத்துக் கொடுத்தது? உண்மை யைச் சொல்'' என்று கேட்டான். வேலையாளும் அதனைத் தைக்க தான் தையல்கார தாஜுத்தீனை அழைத்து வந்ததாகக் கூறினான்.

சுல்தான் அந்த தையல்க்காரனை அழைத்து வரச் சொன்னான். அவன் வந்ததும் சுல்தான் வியாபாரி கொடுத்த பையை எடுத்துக் காட்டி ''நீ இந்தப் பையை எப்போதாவது பார்த்திருக்கிறாயா?'' என்று கேட் டான். தையல்க்காரனும் ''பார்த் தும் இருக்கிறேன். இதன் அடிப் பகுதியைத் தைத்தும் கொடுத்திருக் கிறேன். இதனை நம் நகரக் காஜி கொண்டு வந்து கொடுத்து தைத்து



கொண்டு போனார். அப்போது இதில் செப்புக்காசுகள் இருந்தன'' என்றான்.

அப்போது சுல்தானுக்கு நகரக் காஜிதான் வியாபாரியை ஏமாற்றி விட்டான் என்பது தெளிவாகத் தெரிந்து விட்டது. அவன் தையல்க் காரனை அனுப்பிவிட்டு காஜியை அழைத்து வர ஒருவனை அனுப்பி னார். காஜி வந்ததும் சுல்தான் ''நீ பிறர்பணத்தை ஏமாற்றி எடுத் துக் கொண்டாய் எனப்புகார் வந் திருக்கிறதே. இப்படிச் செய்ய உனக்கு வெட்கமாக இல்லை?'' என்று கோபமாகக் கேட்டான்.

காஜியும் ''நான் அப்படி ஒன்றும் முறை தவறி நடக்கவில்லையே. யாரோ என்மீது பொய்யாகப் புகார் கொடுத்திருக்கிறார்கள்'' என் றான். அப்போது சுல்தான் வியா பாரியின் பையை எடுத்துக்காட்டி ''இந்தப்பையை நீ தையல்க்கார தாஜுத்தீனிடம் கொடுத்துத் தைத்து எடுத்துக் கொள்ளவில்லையா?'' என்று கேட்டான். பையைப் பார்த்ததும் காஜி பதில் சொல்ல முடியாமால் திகைத்துப் போனான்.

மறுவினாடியே அவன் சுல்தானின் கால்களில் விழுந்து ''என்னை மன்னித்து விடுங்கள். நான் அந்த வியாபாரியை ஏமாற்றித்தான் விட் டேன்'' என்று கூறி உண்மையை ஒப்புக் கொண்டான். ஆனால் சுல்தான் அவனை மன்னிக்கவில்லை. சிறைச்சாலைக்கு அவனை இழுத் துச் செல்லும்படி அவன் தன் வீரர்களுக்குக் கட்டளை இட்டான்.

மறுநாள் சுல்தான் வியாபாரியை அழைத்து அவனுக்குக் கிடைக்க வேண்டிய இரண்டாயிரம் தங்க நாணயங்களோடு மேலும் மூவாயி ரம் தங்க நாணயங்களைச் சேர்த்து கொடுத்து ''நீ உயர்பதவியில் இருந்து கொண்டு மோசடி செய்த ஒருவனை நீ எனக்குக் கண்டு பிடித்துக் கொடுத் தாய். அதற்காக உனக்கு மூவா யிரம் தங்க நாணயங்கள் பரிசாக அளித்திருக்கிறேன்'' என்றான்.






மேலூரில் மீனாட்சியின் பக்கத்து வீட்டில்தான் அகிலாண்டம் குடித்தனம் செய்து வந்தாள். அகிலாண்டத்தின் அண்ணிதான் மீனாட்சி. மீனாட்சியின் வாய்க்கு அந்த ஊரே பயந்து கொண்டிருந்தது. அவள் சிறு சிறு விஷயத்திற்கெல்லாம் தினமும் அகிலாண்டத்துடன் சண்டை போட்டு வந்தாள்.

ஒருநாள் அகிலாண்டத்தின் பூனை மீனாட்சியின் வீட்டில் போய் அவள் ஒரு கிண்ணியில் வைத்திருந்த பாலைக் குடித்து விட்டுப் போய் விட்டது. விடுவாளா மீனாட்சி? அகிலாண்டத்தையும் அவள் பூனையையும் திட்டி நொறுக்கலானாள். அதைக்கேட்ட அகிலாண்டம் "என் பூனையைத் திட்டாதே. வேண்டுமானால் அது குடித்த ஒரு கிண்ணி பாலுக்கு பதிலாக இரண்டு கிண்ணி பால் உனக்குக் கொடுத்து விடுகிறேன்" என்றாள்.

மீனாட்சியோ "நீ அந்தப் பூனையை முதலில் ஊருக்கு வெளியே கொண்டு போய் விட்டு விட்டு வா. பிறகு பேசலாம்" என்றாள். அகிலாண்டமோ "அது முடியாது. உன்னால் ஆனதைச் செய்" என்றாள். இதனால் அவர்களிடையே வாய்ச் சண்டை முற்றி விட்டது.

அப்போது வயலுக்குக் கிளம்பிக் கொண்டிருந்த பரமன் தன் தங்கை அகிலாண்டத்திடம் "என்னம்மா! காலையில் ஆரம்பமாகி விட்டதா சண்டை! நீதான் கொஞ்சம் பணிந்து போகக்கூடாதா" என்றான். அகிலாண்டமோ "என்னைச் சமாதானப்படுத்த வந்து விட்டாயே! இதே வார்த்தையை உன் மனைவியிடம் சொல்ல உனக்குத் தைரியம் ஏது? நீதான் அவள் சொல்

—ரேணுகா ரவி—



வதை எல்லாம் கேட்டு 'பூம்' 'பூம்' மாடு மாதிரித் தலையை ஆட்டு கிறாயே" என்றாள். அதுகேட்டுப் பரமன் எதுவும் சொல்லாமல் போய் விட்டான்.

ஆனால் மீனாட்சி பிடித்துக் கொண்டு விட்டாள். அகிலாண்டத்திடம் "நீ எப்படி என் கணவனை 'பூம்' 'பூம்' மாடு எனலாம்? இதற்கு எல்லோர் முன்பும் நீ என்னிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும்" என்று கத்தினாள். அகிலாண்டமோ "முடியாது போ" என்றாள். எனவே மீனாட்சி ஊர்ப் பஞ்சாயத்துத் தலைவரிடம் போய் அகிலாண்டத்தின் மீது புகார் கொடுத்தாள்.

மீனாட்சியைப் பற்றி பஞ்சாயத்துத் தலைவர் நன்கு அறிந்தவர். அவர் அவள் வாயிலாக நடந்ததை எல்லாம் விவரமாகக் கேட்டுக் கொண்டு முடிவில் "இதெல்லாம் சரி என்று சொல்லச் சாட்சி யாராவது இருக்கிறாரா?" என்று கேட்டார். மீனாட்சியும் "இல்லாமல் என்ன? என் தம்பி நடராஜனும், என் தங்கையின் கணவன் முருகனும் எங்கள் சண்டையைப் பார்த்தும் கேட்டுக் கொண்டும் இருந்தார்கள். அவர்கள் சாட்சி சொல்வார்கள்" என்றார்.

தலைவர் அவர்கள் இருவரையும் அழைத்துக் கொண்டு வரும்படிச் சொல்லி மீனாட்சியை அனுப்பினார். தன் வேலையாளை அனுப்பி அகிலாண்டத்தை அழைத்து வரச் சொன்னார். எல்லோரும் வந்ததும் தலைவர் நடராஜனிடம் "இந்த அகிலாண்டம் உன் அத்தானை 'பூம் பூம் மாடு' என்று சொன்னதை நீ கேட்டாயா?" என்று கேட்டார்.

அவனும் "ஆமாம். என் அத்தான் மாடு போல வயலில் உழைக்கிறார். யாராவது சண்டைக்கு வந்தால் மாடு முட்டுவது போலத் தள்ளி விடுவார். கொடுத்த கடனைக் கொடுக்காவிட்டால் மாடுபோல பாய்ந்து கிட்டிபோட்டு வசூலித்து விடுவார். இதெல்லாம்'பூம் பூம் மாடா செய்யும்'?" என்றான்

பஞ்சாயத்து தலைவர் அது

கேட்டு சிரித்தவாறே அடுத்து முரு கனை அழைத்தார். அவனும் "நட ராஜன் சொன்னதெல்லாம் சரி. அவர் மாடுபோல உழைக்கிறார். அவரைப் போய் 'பூம் பூம் மாடு' என்பதா?" என்றான். அப்போது பஞ்சாயத்து தலைவர் "இவர்கள் சொன்னதையெல்லாம் கேட்டாயா? நீ ஏன் உன் அண்ணனை 'பூம் பூம் மாடு' என்றாய்?" என்று கேட்டார்.

அகிலாண்டமும் சற்றும் தயங் காமல் கணீரென்ற குரலில் "என் அண்ணன் நல்ல உழைபபாளி. எருதுபோல பலமும் தைரியமும் உள்ளவனே. இப்படிப்பட்ட என் அண்ணன் என் அண்ணி கண்ணை உருட்டிப் பார்த்ததும் அவள் சொல் வதற்கு ஆமாம் போட்டு பூம் பூம் மாடு போலாகி விடுகிறானே. அந்த எருதின் துணிச்சலும் தைரி யமும் இவள்முன் நிற்கவில்லையே. அதனால்தான் அப்படிச் சொன் னேன்" என்றாள்.

பஞ்சாயத்துத் தலைவரும் அது கேட்டு வேடிக்கை பார்க்க தம் வேலையாள் இருவரையும் பார்த் தார். அவர்கள் அகிலாண்டம் கூறி யதைக் கேட்டு 'பேஷ், பேஷ்' எனக்கூறி பலமாகச் சிரித்தார் கள். பஞ்சாயத்துத் தலைவரும் "அடேயப்பா! பூம் பூம் மாடு என் பதற்கு இவ்வளவு விளக்கமா? இதை இன்றுதான் நான் தெரிந்து கொண்டேன்" என்றார்.

பிறகு அவர் மீனாட்சியையும் அகிலாண்டத்தையும் தனித்தனியே கூப்பிட்டு "நல்லவேளை. நான் இந்த விசாரணையை எல்லோர் முன்னிலையில் நடத்தாமல் உங் களை மட்டும் வைத்துக் கொண்டு நடத்தினேன். இப்படி ஒரே வீட்டுக் காரர்கள் சண்டை போட்டுக் கொண்டால் வீட்டு ரகசியங்கள் அம்பலத்திற்கு வந்து விடும். அதைக் கேட்டு எல்லோரும் சிரிப் பார்கள். இனிமேலாவது சண்டை போடாமல் இருங்கள்" என்று கூறி அவர்களை அனுப்பினார்.





# கொஞ்சம் பொறு!

ஒரு ஊரில் தருமன் என்றும் பீமன் என்றும் இரு ஏழை வாலிபர்கள் இருந்தார்கள். எங்காவது நிரந்தர வேலை கிடைக்குமா என்று அவர்கள் பார்த்துக் கொண்டும் இருந்தார்கள்.

அவர்கள் அடுத்த ஊரிலுள்ள ஜமீன்தாரர் ஒரு நல்ல வேலையாளைத் தேடிக்கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டு ஜமீன்தாரரின் மாளிகையை அடைந்தனர். மாளிகை வாசலில் நின்ற காவல்க்காரனிடம் அவர்கள் வேலை விஷயமாக ஜமீன்தாரரைக் காண வந்திருப்பதாகச் சொன்னார்கள்.

காவல்காரனும் உள்ளே போய் விட்டு வந்து "உங்களை மூன்று நாட்கள் கழித்து வந்து தம்மைப் பார்க்குமாறு ஜமீன்தாரர் உங்களிடம் சொல்லச் சொன்னார்" என்றான். இருவரும் தம் ஊருக்குத் திரும்பி வந்தார்கள்.

நான்காவது நாள் அதிகாலையில் தருமன் எழுந்து பீமனிடம் "இன்று ஜமீன்தாரரைப் பார்க்கப் போக வேண்டும். வா" என்றான். பீமனோ படுத்த படுக்கையிலிருந்து எழுந்திருக்காமல் "இப்பவே என்ன அவசரம்? சற்று நேரம் கழித்துப் போகலாம்" என்றான். தருமனோ "நான் இப்போதே போகிறேன். நீ வேண்டுமானால் பிறகு வா" என்று கூறிவிட்டுச் சென்றான்.

தருமன் போய் இரண்டு மணி நேரம் கழிந்த பிறகே பீமன் ஜமீன்தாரின் ஊர் போய்ச் சேர்ந்தான். அப்போது தருமன் மாளிகை வாசலில் உட்கார்ந்திருப்பதைக் கண்டு பீமன் "நீ எனக்கும் முன்னால் வந்து என்ன பயன்? காத்திருக்க வேண்டித்தானே ஆயிற்று" என்

—திருவையாறு கணபதி—

றான் சலித்துக் கொண்டே.

அப்போது காவல்க்காரன் வந்து "உங்கள் இருவரையும் இரண்டு நாட்கள் கழித்து ஜமீன் தாரர் வரச்சொன்னார்" எனவே இருவரும் தம் ஊருக்குக் கிளம்பி னார்கள். அப்போது பீமன் "ஜமீன் தாரர் இப்படி நாட்களைத் தள் ளிப் போடுகிறாரே. இவர் நமக்கு வேலை கொடுக்கப் போகிறாரா என்ன? அலைச்சல்தான் நமக்கு" என்றான்.

இரண்டு நாட்களான பின் காலையில் தருமன் பீமனை வரச் சொன்ன போது அவன் "நீ போ. அந்த ஜமீன்தாரர் நம்மைக் காத்தி ருக்கும்படிச் சொல்லத்தான் போகி றார். நான் மத்தியான்னம் வரு கிறேன்" என்று கூறினான். தருமன் கிளம்பிச் சென்றான்.

காலையில் வந்த தருமனை ஜமீன்தாரர் மத்தியானம்தான் கூப் பிட்டுப் பார்த்தார். அவர் "நீ இன்று இப்போது சாப்பிட்டு விட்டு நாளை சாயந்திரம் வந்து என்னைப்பார்" என்றார். தரும னும் தன் ஊருக்குத் திரும்பிச் சென்றபோது வழியில் பீமன் வந்து கொண்டிருப்பதைக் கண் டான். அவனிடம் ஜமீன்தாரர் கூறி யதை தருமன் சொல்லவே, பீம னும் "எனக்குத் தெரியும் இப்படித் தான் அவர் தட்டிக் கழிப்பார்" என்று ஏளனமாகக் கூறிச் சிரித்



தான்.

தருமனோ "வேலை கிடைக்க அலைந்துதிரிந்துதான் ஆக வேண் டும். நாளை மாலை இருவரும் போகலாம்" என்றான். பீமனும் "சரி நீ சொல்வதற்காக வருகிறேன். ஆனால் இதுதான் கடைசிமுறை" என்றான். மறுநாள் மாலை இரு வரும் சேர்ந்தே ஜமீன்தாரரின் வீட்டிற்குப் போனார்கள். வாசல் காவலனும் உள்ளே போய்விட்டு வந்து "ஜமீன்தாரர் உங்களை இன்றிரவு இங்கே தங்கச் சொன் னார். நாளை காலையில் உங்க ளிடம் பேசுவார்" என்றான்.

அது கேட்டு பீமன் "வேலை கொடுக்க முடியாது என்றால் தெளி வாக அவர் சொல்லிவிடலாமே.

ஏன் இப்படி இழுத்தடிக்க வேண்டும். நான் போகிறேன். நீயும் வா தருமா'' என்று கூறியவாறே அங்கிருந்து கிளம்பி விட்டான். ஆனால் தருமன் அவனோடு போகவில்லை. வாசல் காப்போன் மறுபடியும் உள்ளே போய்விட்டு வந்து ''ஓ! உன் நண்பன் போய்விட்டானா? நீ இன்றிரவு இங்கேதானே இருக்கப் போகிறாய்? நீ கடைக்குப் போய் ஒரு ஜமக்காளமும் ஒரு போர்வையும் வாங்கி வரவேண்டும் என்று ஜமீன்தாரர் சொல்லி கொஞ்சம் பணம் கொடுத்திருக்கிறார். போய் அவற்றை வாங்கி வா'' என்று கூறிப் பணத்தையும் கொடுத்தான்.

தருமனும் கடைக்குப் போய் அவற்றை வாங்கி வந்து ஜமீன்தாரர் முன்வைத்து மீதப் பணத்தையும் கொடுத்தான். ஜமீன்தாரரும் ''இவை உனக்காகத்தான் வாங்கிவரச் சொன்னேன். சாப்பிட்டுவிட்டு இங்கே படுத்துத் தூங்கு. காலையில் பேசலாம்'' என்றார்.

தருமனும் அன்றிரவு அங்கேயே சாப்பிட்டு விட்டு ஜமக்காளத்தை விரித்து அதில்படுத்து போர்வையைப் போர்த்திக்கொண்டு நன்கு தூங்கினான். மறுநாள் காலை ஜமீன்தாரர் அவனைக் கூப்பிட்டு ''உன்னை எனக்கு மிகவும் பிடித்துப் போயிற்று. நீ என்னை முதலில் காண வந்த நாளிலேயே என்னிடம் வேலைக்குச் சேர்ந்து விட்டதாகக் கணக்கில் எடுத்துக் கொள்கிறேன். உனக்கு மாதம் ஐம்பது ரூபாய் சம்பளம். நீ என் கிராமங்களில் போய் எனக்கு வர வேண்டிய பாக்கிகளை வசூலித்து வந்து கொடுப்பதுதான் உன் வேலை. இதற்குப் பொறுமையும் நேர்மையும் கொண்ட ஒருவனைத் தேர்ந்தெடுக்க நினைத்தேன். நீ அந்த வேலைக்கு ஏற்றவன் என நிரூபித்துவிட்டாய்'' என்றார்.





## நிறம் மாறும் விதம்!

பிளெமின்கோன் என்னும் ஒருவகை நாரைகள் இளஞ்சிவப்பு நிறத்தில் அழகாகத் தென்படுகின்றன. ஆனால் இவற்றின் இயல் நிறம் இதுவல்ல. நீல மும் பச்சையுமாயுள்ள இவை புழுக்களை பிடித்து தின்கவே அவை ஜீரணமாகும்போது சிவப்பு நிறத்தை அடைந்து விடுகின்றன. எனவே இவை சாப்பிடும் உணவே இவற்றின் நிறமாற்றத்திற்குக் காரணம் என்பது நன்கு விளங்குகிறது.

# இயற்கை விநோதங்கள்

## ஜிராப்

ஜிராப்பிற்கு 4-5 அங்குல நீள முள்ள சுண்டெலிக்கு இருப்பது போல ஏழு சிற்றெலும்புகளே ஏழடி நீளக் கழுத்து பகுதியில் உள்ளன. ஜிராபின் நாக்கின் நீளம் 18 அங்குலம். ஒரு மனித னின் நாக்கு சாதாரணமாய் மூன்று அங்கு லம் தான் இருக்கும். ஜிராப் குதிரையை விட வேகமாக ஓடக் கூடியது. அது ஓடும் போது குதிரையைப் போலச் சத்தம் செய்யாமல் ஓடுகிறது!





## நீண்ட ஆயுள் மரம்

பதினைந்தாவது நூற்றாண்டில் பிரான் ஸிற்குக் கொண்டு போகப்பட்ட ஆரஞ்சு மரம் இன்று 'கான்ஸ்டபிள் ட்ரீ' என்ற பெயரில் உள்ளது. 470 வருடங்களாக இது நிறைய பழங்களைத் தந்தது. சாதாரண மாக ஒரு ஆரஞ்சு மரம் நூறு ஆண்டுகள் தான் இருக்கும்.

# Don't you owe the















Tonigh
Tomor

# little one a cuddles?












## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1992 ஜூலை மாத இதழில் வெளியிடப்படும்**



Pramod Bhanushali



I. Umarani

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ மே 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும். ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 100/—பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

---

### மார்ச் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : காற்றினிலேறி விண்ணையும் சாடுவோம்
இரண்டாவது போட்டோ : கனகமணியென மண்ணையும் மாற்றுவோம்

பரிசு பெற்றவர் : வசந்தா நடராஜன், பம்பாய்-37


## அம்புலிமாமா

இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ. 48-00

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :

டால்டன் ஏஜென்சீஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை-600026

Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---

